# ஆந்திர அதிசயங்கள்



பரணீதரன்

அட்டையில் : மும்முடிவரம் பாலயோகி.

படங்கள் : நன்றி — ஆனந்த விகடன்

*Rs.* **12.00**

ANDHRA ADHISIYANGAL

by

BHARANIDHARAN (C)

First Edition December 1989

Published by

KALAIGNAAN PATHIPAGAM

10. Kannadhasan Salai

T.Nagar. Madras 600 017

Printed at

THAIKULAM PRINTING UNIT

21. Tassuddhinkhan Bahadur srteet

Triplicane MADRAS - 600 005

# மறக்க முடியாத தரிசனங்கள்

பதினெட்டு ஆண்டுகளுக்கு முன், 'அருணாசல மகிமை'யை எழுதி முடித்த கையோடு நண்பர் மகாதேவனின் தூண்டுதலின் பேரில் மும்முடிவரம் பாலயோகியின் சிவராத்திரி தரிசனம் காண ஆந்திரம் சென்றேன். அதிசயத்திலும் அதிசயமாக அப்போது பேசப்பட்ட அந்த யோகியைத் தரிசிக்க மும்முடிவரம் சென்ற விவரங்களை தொடக்க அத்தியாயங்களாகக் கொண்டு ஆனந்த விகடனில் 'புனிதப் பயணம்' என்ற கட்டுரைத் தொடர் ஒன்று எழுதினேன். அந்தப் பயண அனுபவங்களே 'ஆந்திர அதிசயங்கள்' நூலில் இடம் பெற்றுள்ளன.

அப் பயணத்தின் போது, சற்றும் எதிர்பாராத விதமாக, குண்டூர் மாவட்டம் பாபட்லா அருகிலுள்ள 'ஜில்லெலமுடி'யில் வாழ்ந்துவந்த 'அம்மா' என்ற ஓர் அதிசய மாதரசியையும் தரிசிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இவை இரண்டு தரிசனங்களும் என் வாழ்க்கையின் மறக்க முடியாத அனுபவங்களில் இரண்டறக் கலந்து விட்டன.

இவ்விருவர்களின் தரிசனம் தவிர, பயணம் செய்த வழியில் சில அதிசய ஆலயங்களைக்காணும் நல்வாய்ப்பும் எனக்குக் கிட்டியது. ஸ்ரீசைலத்தில்,

பாம்புகளை அடக்கி ஆளும் ஓர் அதிசய அனுமந்த தாசரைச் சந்தித்தேன்.

என்னைப் பொறுத்த வரையில், மும்முடிவரம் யோகியாரும் ஜில்லெலமுடி அன்னையாரும் ஒரே ஆண்டில்-1985ஆம் ஆண்டில் - ஒருமாத இடை வெளியில் - மறைந்து விட்டது அதிசயத்திலும் அதிசயமான நிகழ்ச்சியாகும். ஆந்திர மாநிலத் திற்கும், பாரதத்திற்கும் பெருமை சேர்த்த இவ்விரு மானுடப் புதிர்களை நேரில் காணக் கொடுத்து வைக்காதவர்களுக்கு இச்சிறு நூல் ஓரளவு பயன் படும் என்று நம்புகிறேன்.

அன்பன்

10-12-89

பரணீதரன்

# ஆந்திர அதிசயங்கள்

ஆந்திராவில் ராஜ மகேந்திரபுரத்திற்கு அருகிலுள்ள, அமலாபுரத்தை யடுத்துள்ள மும்முடிவரம் ஸ்ரீ பாலயோகியைப் பற்றி நான் முன்பே அறிந்திருந்தேன். மாடு மேய்த்துக் கொண்டிருந்த ஒரு சிறுவன், திடீரென்று ஒரு நாள் தியானத்தில் அமர்ந்து, சமாதி நிலை கூடி விட்டார் என்றும், ஒவ்வோர் ஆண்டும் சிவராத்திரி அன்று மட்டும் அவர் பக்தர்களுக்குத் தரிசனம் தருகிறார் என்றும், அன்று அச்சிறு கிராமத்தில் நான்கு ஐந்து லட்சம் மக்கள் கூடுகின்றார்கள் என்றும் அன்பர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன் அவ்வளவுதான். அதற்கு மேல் அத் தவயோகியைப் பற்றிய வேறு விவரங்கள் ஒன்றும் எனக்குத் தெரியாது.

பதினாறு ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் நண்பர் மகாதேவன் இல்லம் நாடி வந்து, மும்முடிவாரம் ஸ்ரீ பால யோகியைப் பற்றி என்னிடம் பேசி அன்னாரைத் தரிசிக்க வேண்டும் என்ற எனது நெடு நாளைய வேட்கையை அதிகப் படுத்தி விட்டுச் சென்றார்

''அடுத்த சிவராத்திரிக்குப் போய் வரலாமா? நீங்களும் வருகிறீர்களா?'' என்று கேட்டேன் நான்.

''உங்களுக்கு நேரம் இருந்தால் அதற்கு முன்பே கூட தரிசிக்கலாம். சிவராத்திரி வரையில் காத்திருக்க வேண்டியதில்லை'' என்றார் மகாதேவன். நான் ஆச்சரியத்தோடு அவரைப் பார்த்தேன்.

"என்ன சார் சொல்றீங்க? பாலயோகி, சிவராத்திரி ஒரு நாள் தான் தரிசனம் தருவதாகக் கூறுகிறார்கள். அதற்கு முன்பே எப்படி அவரைத் தரிசிக்க முடியும்?" என்று கேட்டேன் நான்.

"அது உண்மைதான். ஆனால், ஒவ்வொரு ஆண்டும் சிவராத்திரிக்கு இரண்டு மாதங்களுக்கு முன் பாலயோகி ஆசிரமக் கமிட்டி மெம்பர்கள் கதவைத் திறந்து, பால யோகியைத் தனிமையில் சந்தித்துப் பேசுகிறார்கள். சிவ ராத்திரி தரிசனத்திற்கான ஏற்பாடுகளைப் பற்றி அவர்களிட மிருந்து யோகியார் கேட்டறிகிறார். அப்போது தேவையான யோசனைகளையும் அவர்களுக்குக் கூறுகிறார்..." என்று மகாதேவன் கூறிய போது ஆச்சரியம் அடைந்தேன்.

"என்னது? ஸ்ரீ பாலயோகி பேசுகிறாரா? அவர் ஒரு மௌனி என்கிறார்கள். தரிசனத்தின் போது கண்களைத் திறந்துகூட யாரையும் பார்ப்பதில்லை என்று கூறுகிறார்கள். நீங்கள் சொல்வது புதுத் தகவலாக இருக்கிறதே" என்று குறுக்கிட்டேன் நான்.

மகாதேவன் லேசாகச் சிரித்துக் கொண்டார்.

"பேசுவது என்றால் வாயைத் திறந்து பேசுவதில்லை. கை ஜாடையாலேயே பேசுகிறார். கண் பார்வையாலேயே புரியவைக்கிறார். கமிட்டி மெம்பர்களை மட்டும் கண் திறந்து பார்க்கிறார். அன்று அவர் கமிட்டி மெம்பர்களைச் சந்தித்த பிறகு, வெளியில் கூடியிருக்கும் பொதுமக்களுக்குத் தரிசனம் தருகிறார். இது ரகசியம். விளம்பரமில்லாத தரிசனம். நீங்கள் வருவதானால் சொல்லுங்கள், போய் வரலாம். அன்று லட்சக் கணக்கில் கூட்டம் வராது. நூற்றுக் கணக்கில் தான் வரும். நாம் நிம்மதியாகத் தரிசனம் செய்யலாம்" என்று என்னை அழைத்தார் மகாதேவன்.

"எப்போது செல்ல வேண்டியிருக்கும்?" என்று கேட்டேன் நான்.

''டிசம்பர் இருபதாம் தேதி கமிட்டி தரிசனம். நாம் 19-ம் தேதி மாலைக்குள் அங்கிருந்தால் போதும்.''

சென்னையை விட்டுப் புறப்படுவதற்கு முன், மகாதேவன் என்னை திரு. வி. பாலசுந்தரம் ஐ.ஏ.எஸ். அவர்களுக்கு அறிமுகம் செய்துவைத்தார். அவர் அப்போது பப்ளிக் சர்வீஸ் கமிஷன் சேர்மனாக இருந்தார். மும்முடிவரம் ஸ்ரீ பாலயோகி ஆச்ரமக் கமிட்டியின் தலைவராகவும் நற்பணியாற்றி வந்தார்.

அந்தக் கமிட்டி தோன்றியதிலிருந்து, டி. பாலசுந்தரம் ஐ.ஏ.எஸ். என்ற அதிகாரி அதன் தலைவராக இருந்து வந்தார். அவரது மறைவிற்குப் பிறகு வி. பாலசுந்தரம் ஐ.ஏ.எஸ். தலைவராக ஆனார். இந்த ஒற்றுமையைக் கண்டு நான் ஆச்சரியப்பட்ட போது, ''இதைவிட பெரிய ஆச்சரியம் என்னவென்றால், சற்றும் எதிர்பாராத வகையில் அந்தப் பொறுப்பு எனக்கு வந்த நிகழ்ச்சிதான்'க் என்று சொல்லிவிட்டு திரு. பாலசுந்தரம் கடந்த சிவராத்திரிக்கு முன்னால் தாம் கமிட்டியின் தலைவராக்கப்பட்ட விந்தையான நிகழ்ச்சியைக் கூறினார்.

நண்பரின் தூண்டுதலின் பேரில், இரண்டு மூன்று முறை தொடர்ந்து தரிசனத்திற்காக மும்முடிவரம் சென்று வந்து கொண்டிருந்தார் பாலசுந்தரம். கடந்த ஆண்டு சிவராத்திரிக்கு முன்பு 'கமிட்டி மீட்டிங்' ஆன பிறகு கிடைக்கும் தரிசனத்திற்காகச் சென்றிருந்தார். உள்ளே கமிட்டி உறுப்பினர்கள் பாலயோகியுடன் பேசிக் கொண்டிருந்த போது, பாலசுந்தரம் வெளியே தரிசனத்திற்காகக் காத்துக் கொண்டிருந்தார். தரிசனம் முடிந்து வெளியே வந்த கமிட்டி அங்கத்தினர்கள் பாலசுந்தரத்தினிடம் வந்து, வாழ்த்துத் தெரிவித்தார்களாம். பாலயோகி, தம்மையே தலைவராக இருக்கும்படி பணித்த விவரத்தை அறிந்த போது பால சுந்தரம் பேராச்சரியத்தில் மூழ்கிப் போனாராம்

## பானக நரசிம்மர்

எங்கள் கார் நெல்லூரை நோக்கி விரைந்து கொண்டிருந்தது.

அன்று இரவு விஜயவாடாவுக்குப் போக முடியா விட்டாலும் குண்டூரிலாவது தங்கலாம் என்று திட்டமிட்டிருந்த நாங்கள், ஓங்கோல் வந்து சேரும்போதே மணி ஒன்பதரைக்கு மேலாகிவிட்டது. அன்றிரவு அங்கேயே தங்கிவிட்டு, மறுநாட் காலை எங்கள் மும்முடிவரம் பயணத்தை மீண்டும் தொடர்ந்பதோம்.

நாங்கள் சென்ற பாதையில், இரு புறமும் புகையிலை பயிராகியிருந்தது. வளம் கொழிக்கும் ஆந்திரத்திற்கு செல்வம் சேர்க்கும் செடிகள் அவை. அத்தனை புகையிலைச் செடிகளையும் பார்த்த போது போட்டோ கிராபர் சுந்தரத்திற்கு நாவில் நீர் ஊறிற்று. உடனே கையிலிருந்த புகையிலைப் பாக்கெட்டைப் பிரித்து, உருட்டி உருட்டி வாயில் திணித்துக்கொண்டார்.

குண்டூரைக் கடந்து வேகமாகச் சென்றுக் கொண்டிருந்தோம். பன்னிரண்டு மைல்கள் வந்திருப்போம். வலப்புறத்தில் ஒரு மலை தெரிந்தது.

''இது என்ன மலை?'' என்றார் பாப்ஜி.

''இதுதான் மங்களகிரியாக இருக்கும். எனக்கு ரொம்ப நாட்களாக பார்க்க வேண்டும் என்ற ஆசை. இறங்கிப் பார்த்துவிட்டு போகலாம்?'' என்று கூறினேன் நான்.

''அந்த மலை மேலே தானே பானகநரசிம்மர் இருக்கிறார். நான்கூட.கேள்விப்பட்டிருக்கேன். கட்டாயம் இறங்கி தரிசனம் செய்துவிட்டுத் தான் போகனும்'' என்றார் பாப்ஜி.

மலையடிவாரத்தில் இருந்த கோயிலின் புது மாதிரியான கோபுரம் கண்ணைக் கவர்கிறது. அத்தனை உயரமான கோபுரத்திற்கு அடிப் பாகம் அகலமாக அல்லவா இருக்க வேண்டும்? அப்படியின்றி, தமிழ் நாட்டு ஆலய கோபுரங் களினின்றும் வேறுபட்டு இருந்தது அது. அதன் உயரத் தையும் எழிற் தோற்றத்தையும் வியந்து கொண்டே கோபு வாசலை அடைந்தோம். எங்களுக்காகக் காத்திருந்தவர் போல் அங்கு ஒருவர், 'பானகப் பிரசாதம் சாப்பிடுங்கோ' என்று சுமாரான தமிழில் எங்களை உபசரித்தார். பானக நரசிம்மரின் கருணையே கருணை. கடும் வெயிலில் தாகத் துடன் வந்திருக்கும் அன்பர்களை அத் தெய்வம் ஆட் கொண்ட அதிசயத்தை நினைத்து வியப்பில் ஆழ்ந்தோம்.

எங்களுக்கு பானகம் அளித்த ராகவாச்சாரி, ஐந்து ரூபாய் கொடுத்தால் ஆராதனைக்காக அரைகுடம் பானகம் கரைத்துத் தருவதாகவும், பன்னிரண்டு மணிக்குள் மலை ஏறி வந்தால் நரசிம்மருக்கு பானக ஆராதனை நடைபெறுவ தைக் காணலாம் என்றும் கூறினார். அதற்கு ஏற்பாடு செய்துவிட்டு, அவரை மலைக்கு அனுப்பிவிட்டு, நாங்கள் ஆலயத்தினுள் நுழைந்தோம். மன்னிக்கவும்-தரிசனத்திற்கு சீட்டு வாங்கிய பிறகுதான் உள்ளே அனுமதிக்கப்பட்டோம்!

கிழக்கே பார்த்து திருச் சந்நிதி கொண்டிருப்பவர் ஸ்ரீ லட்சுமி நரசிம்ம சுவாமி. ராஜ்யலட்சுமி தாயார் வடப்புறம் தனிச் சந்நிதியில் எழுந்தருளி யிருக்கிறார். பிராகாரத்தில் ஸ்ரீ கோதண்டராமர் சந்நிதி இருக்கிறது. தென் பிராகாரத் திலும், வடப் பிரகாரத்திலும் சிறு கோபுரங்கள் இருக்கின்றன. மேற்கில் மொட்டை கோபுரம் பாதியோடு நிற்கிறது.

மணியாகி விட்டதால் பானக நரசிம்மரைத் தரிசிப்பதற் காக அவசர அவசரமாக நாங்கள் மலையடிவாரத்தை நோக்கி நடந்தோம்.

சோளிங்கர் மலையில் உள்ளது போலவே மங்களகிரியிலும் படிகள் சீராகவே அமைந்திருக்கின்றன. ஆனால், இம்மலை அத்தனை உயரமாகவோ செங்குத்தாகவோ இல்லை. எளிதாக ஏற முடிகிறது, படியேறிச் செல்லும் வழியில் ஸ்ரீ வெங்கடேச்வரர் தேவாலயம் ஒன்று இருக்கிறது. அவரை பாலசிட்டு வெங்கடேச்சர சுவாமி என்று அழைகிறார்கள். அக் கோயிலைக் கடந்து சென்றால், ஸ்ரீ சைதன்யர் அமைத்த திருப்பாதங்கள் இருக்கின்றன அவற்றையும் சேவித்துக் கொண்டு பானக நரசிம்மசுவாமி கோவிலை அடைகிறோம். தெலுங்கில் அவரை பானகாலு சுவாமி என்று அழைக்கிறார்கள்.

ஸ்ரீ கருடாழ்வாரைத் தரிசித்துக் கொண்டு மூலஸ்தானத்தைக் காணச் சென்றோம். வெளி மண்டபத்தில் ராகவாச்சாரி பானகம் கரைத்துக் கொண்டிருந்தார். வெல்லம். ஏலக்காய், மிளகு எல்லாம் கலந்து 'கம்'மென்று மணத்தது அது. எங்கு பார்த்தாலும் வெல்லத் துண்டுகள் சிதறிக் கிடந்தன. ஆனால் ஓர் ஆச்சரியம். அங்கு ஓர் ஈயையோ எறும்பையோ காண முடியவில்லை. விசாரித்த போது இது இத்தலத்தில் விளக்கம் கூறமுடியாத ஓர் அதிசயம் என்று அறிந்தோம்.

மேற்கு நோக்கிய சந்நிதி. மலைப்பாறையில் ஸ்ரீநரசிம்ம சுவாமி சுயம்புவாக எழுந்தருளியிருப்பதாகக் கூறினார்கள். அதன்மீது ஸ்ரீ நரசிம்மரின் திருமுகக் கவசம் காணப்பட்டது. அவரது திருவாய் திறந்து இருக்கிறது.

ராகவாச்சாரி நிவேதனத்துக்காகக் கரைத்த அரைக் குடம் பானகத்தைக் கொண்டு வந்து வைத்தார். பட்டர் மந்திர கோஷத்துடன் சங்கில் பானகத்தை எடுத்து சுவாமியின் வாயில் ஊற்றிக்கொண்டேயிருந்தார். சிங்கக் கடவுள் அதை விழுங்குவது போல் 'களக்' 'களக்' என்று நமக்கு

சப்தம் கேட்கிறது. நம் நெஞ்சு குளிர்கிறது. பட்டர் பானகத்தை ஏழெட்டு முறை வார்த்த பிறகு நிறுத்தி விடுகிறார். நிவேதனம் முடிந்துவிட்டதற்கு அடையாள மாகத் தீபாராதனை காட்டுகிறார். அந்த வெளிச்சத்தில் சுவாமியின் வாயை நன்றாகப் பார்க்கிறோம். அதில் பானகம் நிரம்பி வழிகிறது.

பானகப் பிரசாதத்துடன், நிவேதனம் செய்த வெல்லத் துண்டையும் பிரசாதமாகத் தருகிறார் பட்டர்.

தினமும் குறைந்தது பத்து குடம்பானகம் நிவேதனம் ஆகிறது. திருவிழா நாட்களிலோ கேட்கவே வேண்டாம். அத்தனையும் எங்கே போகிறதோ?

இரண்யாசுரனை வதம் செய்துவிட்டு கோபத்துடன் குமுறிக் கொண்டிருக்கிறார் ஸ்ரீ நரசிம்மர். அப்போது சர்வ மங்கள சொரூபிணியான லட்சுமி தேவி, இம்மலையில் தவம் செய்து, அவரது கோபத்தைத் தணிக்கும் பொருட்டுப் பானகத்தை நிவேதனம் செய்தாள். அதனாலேயே இதற்கு மங்களகிரி என்ற பெயர் வந்தது. இது புராணக் கதை.

கோயில் பட்டர் சொல்லுகிறார் :

ஸ்ரீ நரசிம்மமூர்த்தியே இம்மலை வடிவில் இருக்கிறார். நான்கு யுகங்களாக இங்கு இவருக்கு வழிபாடு நடந்து வரு கிறது. கிருத யுகத்தில் இவருக்கு அமிருத ஆராதனை நடை பெற்றது. திரேதா யுகத்தில், நெய். துவாபர யுகத்தில் பால். கலியுகத்தில் பானகம் படைக்கிறோம். இவர் நரஹரி. ஹரி, நாம் அளிக்கும் பானகத்தில் ஒருபாதியை எடுத்துக்கொண்டு, மற்ற பாதியை நரனுக்குக் கொடுத்து விடுகிறார். அதுதான் ஐதீகம். ஒரு குடமோ, அரை குடமோ, ஒரு செம்போ பானகம் கரைத்து வைத்தால் அதில் பாதியைத்தான் அவர் அருந்துகிறார்.

ஸ்ரீ நரசிம்ம மூர்த்தி திருப்தியாக ஏற்றுக் கொண்டபிறகு, அன்புடன் எங்களுக்கு அளிக்கப்பட்ட பானகத்தை ஆளுக்கொரு தம்ளர் அருந்திவிட்டு, சுவாமி கோயிலிலிருந்து தென் புறமாகக் கீழே இறங்கி, பிராகாரத்தில் வலம் வந்தோம். வடக்குப்புறம் சற்று உயரத்தில், தெற்கு நோக்கி தாயார் சந்நிதி கொண்டிருக்கிறாள். தெலுங்கில் அவளுக்கு 'மார் கொண்ட லட்சம்மா' என்ற திருநாமம் வழங்கப்படுகிறது.

எல்லா செல்வங்களுக்கும் அதிதேவதையான மகா லட்சுமி, அங்கு ஓர் ஏழைச் சுமங்கலியைப் போல், சாதாரணப் புடவையுடன் காட்சி தருகிறாள். அன்னை அங்கு தவம் இருந்ததால் தவக் கோலத்தில் எளிமையுடன் எழுந்தருளியிருப்பதாகக் கூறப்படுகிறது.

பின்னர் வீராஞ்சநேயரைத் தரிசித்துக் கொண்டு கீழே இறங்கினோம். படிகளில் இறங்கி வரும்போது கீழே பார்க்கிறோம். ஊரின் வனப்புமிகு இயற்கைத் தோற்றம் நம் நெஞ்சையள்ளுகிறது. ஸ்ரீ லட்சுமி நரசிம்ம சுவாமி ஆலயத்தின் கோபுரங்கள் கண்ணைக் கவருகின்றன. அக்கோயிலை அடுத்து, வடக்கே மற்றொரு சிறு ஆலயம் தெரிந்தது. விசாரித்தபோது, அது ஒரு சிவாலயம் என்று அறிந்தோம்.

மங்களகிரிக்கு வந்ததும், கல்யாணசரஸ் என்ற திருக்குளத்தில் நீராடிவிட்டு, கரையில் உள்ள ஸ்ரீ பிரபத்யாஞ்சநேய சுவாமியை வழிபட வேண்டும். அவர்தான் மங்கள கிரியின் காவல் தெய்வம். ராமாவதாரம் முடிந்து ஸ்ரீமந் நாராயணன் வைகுண்டம் செல்லும்போது, ஸ்ரீ ஆஞ்சநேய சுவாமி தாமும் ஸ்ரீ வைகுண்டத்திற்கு வர வேண்டும் என்று விரும்பினாராம். அப்போது ஸ்ரீமந்நாராயணன், ஆஞ்சநேயரை மங்களகிரியிலேயே தங்கி ஸ்ரீ நரசிம்மரை வழிபட்டுக் கொண்டிருக்கும்படி பணித்து விட்டுச் சென்றதாகத் தலபுராணம் கூறுகிறது.



ஜில்லெலமுடி
ஆச்சரமம்



பாலயோகி மண்டபம்



ஸ்ரீ ஜகன்மோகினி —
கேசவசுவாமி ஆலயம்



ஸ்ரீ கோமேச்வரர்
ஆலயம்



திராட்சாராமம்
கோயில்

ஸ்ரீ மல்லிகார்ஜுன
சுவாமி கோயில்
(விஜயவாடா)

ஸ்ரீ பிரபத்யாஞ்சநேயரை வழி பட்ட பிறகு, ஸ்ரீ பிரம ராம்பா சமேத ஸ்ரீ மல்லேச்வர சுவாமியைத் தரிசிக்க வேண்டும். பின்னரே மலையேறிச் செல்ல வேண்டும். அதற்குக் காரணமும் இருக்கிறது.

ஸ்ரீ பிரும்மவைவர்த்தப் புராணத்தில் ஸ்ரீ சங்கரன், பார்வதி தேவிக்கு ஸ்ரீ லட்சுமி நரசிம்மரின் பிரபாவத்தைக் கூறுகிறார். அப்பகுதிக்கு 'பவானீசங்கர கீதா' என்றுபெயர். இது, சிவ வைஷ்ணவ பேதமில்லாத அரும் பெரும் தத்து வத்தை விளக்குகிறது.

மலைமீது எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பானக நரசிம்ம சுவாமியைத் தரிசித்து விட்டுத் தான் கீழே கோயில் கொண்டிருக்கும் ராஜ்ய லட்சுமி நரசிம்ம சுவாமியைத் தரிசனம் செய்ய வேண்டும் என்ற மரபு இருந்து வருவதாகப் பின்னர் கேள்விப்பட்டேன்.

புனிதத் தலங்களையும் ஆலயங்களையும் தரிசிக்கச் செல்கிறவர்கள், தரிசன விதிமுறைகளை அறிந்து செல்ல வேண்டும். அல்லது, உள்ளூரிலாவது கேட்டறிய வேண்டும். இல்லாவிடில் எங்களைப் போல் தலைகீழாகப் பார்த்து விட்டுத் திரும்பும்படிதான் நேரிடும்!

கீழே இருக்கும் ஸ்ரீ லட்சுமி நரசிம்ம சுவாமி கோயில் துவாபர யுகத்தில், பாண்டவர்களின் மூத்தவரான ஸ்ரீ தர்ம ராஜனால் நிர்மாணிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

வன வாசத்தின் போது பஞ்ச பாண்டவர்கள் இப்பகுதி களில் தங்கியிருந்தார்களாம். அம்மலைப் பிரதேசத்தில் அர்ஜுணன் தவம் இருந்திருக்கிறான். மங்கள கிரியில் பீமன் சாளிக்கிராமத்தை வைத்து பூஜித்துக் கொண்டிருந்த தாகவும், ஒரு நாள் சுவாமி, தர்மராஜனின் கனவில்தோன்றி தம்மை அங்கேயே பிரதிஷ்டை செய்யும்படி கேட்டுக்

கொண்டதாகவும், அதற்கிணங்க தர்மராஜன் அங்கு லட்சுமி நரசிம்மரைப் பிரதிஷ்டை செய்ததாகவும் தலபுராணத்தில் காணப்படுகிறது. எனவேதான், சுவாமியின் திருக் கல்யாணம், இத்தலத்தில் க்ஷத்திரிய முறைப்படி நடை பெற்று வருகிறது.

பங்குனி மாதத்தில் மங்களகிரித் திருநாள் என்று சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இதைத் தவிர, மலைமீது வைகுண்ட ஏகாதசி, நரசிம்ம ஜெயந்தி, பங்குனி பௌர்ணமி முதலிய நாட்கள் திருவிழாக்களாகக் கொண் டாடப்படுகின்றன. இதர நாட்களில் பகல் பன்னிரண்டு மணியோடு பூஜை நிவேதனங்களை முடித்துக் கொண்டு பட்டர் கீழே இறங்கி விடுகிறார். மாலை இரவு நேரங்களில் தேவர்கள் அங்கு வந்து அர்ச்சனை செய்வதாக ஒரு நம்பிக்கை இருந்து வருகிறது.

திருவண்ணாமலையைப் போன்று, மங்களகிரி என்ற பெயர் ஊருக்கும் மலைக்கும் பொதுவாக அமைந்திருக்கிறது அதற்கு தர்மாத்ரி, தோதாந்ரி என்ற திருநாமங்களும் உண்டு. இது முக்தித் தலங்களில் ஒன்று. பத்ரிகாச்ரமம், நைமிசாரண்யம், ஸ்ரீரங்கம், அகோபிலம், திருப்பதி போன்று பிரசித்தி பெற்றது. ஏழு குல பர்வதங்களில் இது ஒன்று. ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் பார்யாத்ர பர்வதம் என்று மங்கள கிரி குறிப்பிடப்பட்டுள்ளது.

முன்காலத்தில் விஜயவாடாவிலிருந்து, மங்களகிரி வரையில் ஒரே மலைத்தொடராக இருந்திருக்கிறது. இந்திரகீலாத்ரி என்ற அம்மலையின் வடக்கு முனையில் கனகதுர்க்கா ஆலயமும், தென்முனையில் ஸ்ரீ நரசிம்மர் ஆலயமும் அமைந்திருக்கின்றன. அப் பகுதியில் பாய்ந் தோடி வந்த கிருஷ்ணா நதிக்குத் தடையாக அம் மலைத் தொடர் குறுக்கே நின்றதால், நதிக்குச் சற்று வழிவிடும்படி

தேவர்கள் பிரார்த்தித்துக் கொண்டனர். அதற்குச் செவி மடுத்து அம்மலை ஒரு சிறிய சுரங்க வழியை ஏற்படுத்தியது. கிருஷ்ணா நதியோ, முழு வேகத்துடன் வெள்ளப் பெருக் கெடுத்து ஓடி, அம் மலையை நடுவே பிளந்து பதினாறு மைல் தொலைவில் தூக்கியெறிந்து விட்டதாம். 'ஏனமலகு திருகொண்டா' என்ற பெயருடைய அந்த மலையில் ஸ்ரீ பரசுராமர் கட்டிய சிவாலயம் ஒன்று இருக்கிறது.

கிருஷ்ணாநதிக்கு வடக்கே உள்ள மலைக்கு கனகாசலம் என்றும் அங்குள்ள ஊருக்கு கனகாக்கியபுரியென்றும் பெயர்கள் ஏற்பட்டன. மகிஷாசுரனைக் கொன்று வெற்றி வாகை சூடிய சுவர்ணரூபிணியான தேவி 'கனகதுர்க்கா' என்ற திருநாமம் பெற்றாள். துர்க்கையம்மனின் விஜயத்தால் சிறப்புற்ற ஊர் விஜயவாடா ஆயிற்று.

பல மகான்களும் தவச் சீலர்களும் இத் தலத்திற்கு எழுந்தருளியிருக்கிறார்கள். ஸ்ரீ சைதன்யரும் வல்லபாசாரியாரும் இங்கு வருகை தந்ததால் வடதேசத்தில் மங்களகிரியின் புகழ் பரவிற்று. இம் மலையின் உச்சியில் உள்ள 'கண்டாலராயுடு குடி' என்ற ஒரு சிறு மண்டபம் இருக்கிறது. அதில் 'கண்டதீபம்' ஏற்றப்படுகிறது. கார்த்திகை போன்ற முக்கிய தினங்களில் தேவஸ்தானத்தாரே திருவிளக்கு ஏற்றுகிறார்கள். தங்களுடைய இன்னல்கள் நீங்கவேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்ளும் பக்தர்கள் தங்கள் வேணடுதல் நிறைவேறியதும் திருவிளக்கு ஏற்றும் வழக்கமும் இருந்து வருகிறது. இந்த இடத்திற்குப் போவதற்கு படிக்கட்டுகள் கிடையாது. சிரமப்பட்டுத்தான் ஏறிப்போக வேண்டும்.

இருபதாம் நூற்றாண்டில் மங்களகிரியின் ஒளிவிளக்காக விளங்கி இத் தலத்தின் மகிமையை மேலும் பிரகாசிக்கச் செய்தவர் பாலாம்பாள் என்ற மங்கையர் திலகம். அந்த அம்மாவின் நினைவாக திருக்குளத்திற்கு மேற்கே ஒரு சத்திரம் இருக்கிறது.

தெனாலிக்கருகில் பிறந்து வளர்ந்த அந்த அம்மாளுக்குப் புக்ககம் மங்களகிரி. இளம் வயதிலேயே கணவனையிழந்த அவர், மழலைச் செல்வம் இல்லாததால், மைத்துனரின் மகனை எடுத்து வளர்த்து வந்தார்.

கணவன் மறைந்த பிறகு தமது சொத்துக்களையெல்லாம் ஸ்ரீ நரசிம்மசுவாமிக்கு எழுதி வைத்துவிட்டு, ஆசார நியமங்களோடு கூடிய தூய வாழ்க்கையை மேற்கொண்டு, வெள்ளையாடையுடுத்தி, பானக நரசிம்மரின் சந்நிதியில் மூன்று ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார் பாலாம்பாள். ஒரு சமயம் பேய்மழை பெய்து மேலிருந்து வழிந்த சேற்றால் மறைக்கப்பட்ட நிலையிலும் அவரது தவம் கலையவில்லை. ஒருநாள் நரசிம்ம சுவாமி பாலகனாக வந்து பாலாம்பாளிடம் உணவு யாசித்தாகவும் 'உன் கையால் அமோகமான அன்னதானம் நடைபெற வேண்டும்' என்று ஆசீர்வதித்து விட்டு மறைந்ததாகவும் கூறப்படுகிறது.

வைதீக தர்மத்திற்கு விரோதமாக இருக்கிறாள் என்று ஊரார் பாலாம்பாவின் மீது பகை பாராட்டினார்கள். விதவைக் கோலம் பூண வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். துக்கம் தாங்காமல் அந்த அம்மாள் உயிரை மாய்த்துக் கொள்வதற்காக ஒருநாள் திருக்குளத்தில் குதித்து விட்டாள். ஆனால் மறுநாள் காலை, உயிர் ஊசலாடிக் கொண்டிருந்த அவரது உடல் ஆஞ்சநேயர் சந்நிதியில் காணப்பட்டது. அதைக்கண்டு எல்லோரும் ஆச்சரியப் பட்டனர்.

பாலாம்பாளை ஏளனம் செய்த ஒருவரின் கண்களுக்கு அந்த அம்மாள் நரசிம்மசுவாமி போலவே தோற்றமளிக்கவே நடுங்கிப் போன அவர், அப்படியே அந்த அம்மாளின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டாராம். ஒரு சமயம் மங்களகிரிக்கு யாத்திரை வந்த ஸ்ரீ சிருங்கேரி பீடாதிபதிகளான ஸ்ரீ நரசிம்மபாரதி சுவாமிகள், பாலாம்பாளின் யோக

நிலையைக் கண்டறிந்து அவருக்கு மரியாதைகள் செய்தார். அதற்குப் பிறகே மங்களகிரியில் வசித்த வைதீகர்கள் அந்த அம்மாளுக்கு மதிப்புத் தரத் தொடங்கினார்கள்.

பாலாம்பாள் சுமார் ஐம்பதாண்டு காலம் செய்துவந்த அன்னதான தர்மத்தைப் பற்றி ஆந்திரப் பிரதேசம் முழுவதும் பெருமையாகப் பேசப்படுகிறது. திருவிழாக் காலங்களிலெல்லாம் எத்தனை ஆயிரம் பேர் வந்தாலும் 'இல்லை' என்று கூறாமல் வடை, பாயசத்துடன் உணவு அளித்து மகிழ்ந்தார் அவர். அவரது கை தங்கக் கை. அன்னதானத்தின் போது அவர்தான் பாத்திரத்திலிருந்து அன்னம் எடுத்துக் கொடுப்பாராம். அது எடுக்க எடுக்கக் குறையாமல் அதிகமாகிக் கொண்டேயிருக்குமாம். தட்டுப் பாடு ஏற்பட்டால் எதிர்பாராமல் யாரோ வந்து சமையலுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்துவிட்டுப் போவார்களாம். அந்த அம்மாள் மாட்டு வண்டியில் ஏறி உட்கார்ந்து கிராம வலம் போனால், ஒவ்வொரு வீட்டிலிருந்தும் பண்டங்கள் வந்து குவியும். அவருக்கு அளிப்பதை ஒவ்வொருவரும் தமது பெரும் பாக்கியமாகக் கருதினார்கள்.

அன்னதானத்திற்கு ஏதாவது இடையூறு ஏற்பட்டால் பாலாம்பாள் கலங்க மாட்டார். கற்பூரத்தை ஏற்றி, 'ஜய நரசிம்மா, ஜய நரசிம்மா' என்று கோஷிப்பார். எல்லா இடையூறுகளும் தானாக விலகிவிடும். ஒரு சமயம் திருவிழாவின் போது எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அப்போது, கருமேகங்கள் சூழ்ந்து பேய்மழை கொட்டுவது போல் வானம் பயமுறுத்தியது. உடனே பாலாம்பாள் கற்பூரத்தை ஏற்றி, ஆகாயத்தை நோக்கித் தீபாராதனை காட்டி, 'ஜய நரசிம்மா' என்று முழங்கினார். சற்றைக்கெல்லாம் மேகங்கள் விலகி சூரியன் வெளிவந்தான். இந்த அதிசயத்தை நேரில் கண்டவர்கள் இன்றும் மங்களகிரியில் இருக்கிறார்கள்.

ஸ்ரீ நரசிம்ம சுவாமி சந்நிதியில் அமர்ந்திருந்த மகான் மல்லாதி சுப்பராஜு, பாலாம்பாளை சிஷ்யையாக ஏற்றுக் கொண்டு, உபதேசம் செய்துவிட்டு மறைந்தார். இறுதி வரை தமது அன்னதான கைங்கர்யத்தை இடைவிடாது செய்துவிட்டு, 1944-ம் ஆண்டு நமது தொண்ணூறாவது வயதில் பாலாம்பாள், நரசிம்ம சுவாமியின் மலரடிகளைச் சேர்ந்தார்.

## மும்முடிவரம்

மங்களகிரி லட்சுமி நரசிம்ம சுவாமியையும் பானக நரசிம்ம சுவாமியையும் தரிசித்து விட்டு, மும்முடிவரத்தை நோக்கிப் புனிதப் பயணத்தைத் தொடர்ந்தோம். விஜய வாடா நகரத்திற்குள் நுழையும் போதே தேவபுரிக்குச் செல்வது போன்ற ஓர் உணர்வு ஏற்படுகிறது. கிருஷ்ணா நதியின் மீதுள்ள நீண்ட பாலத்தின் மீது செல்லும் போது, சுற்றுப்புறமெங்கும் கோலோச்சும் இயற்கையின் வனப்பு நம்மை வசீகரிக்கிறது. கிருஷ்ணாநதியும், இந்திரகீலாத்ரி மலைத் தொடரும், ஸ்ரீ கனக துர்க்கையம்மன் ஆலயமும் அந்நகரத்திற்கு தெய்வீக எழிலைக் கூட்டுகின்றன.

விஜயவாடாவில் இறங்கி ஸ்ரீ கனக துர்க்கையைத் தரிசிக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. சிந்தனை செய்து பார்த்தோம். அப்போது மணி மாலை மூன்று தான், அந்நேரத்தில் கோயில் திறந்திருக்காது. தரிசனத் திற்காகக் காத்திருந்தால் மும்முடிவரம் போய்ச் சேர வெகு நேரம் ஆகிவிடும். வழியில் எங்கும் தாங்காமல் நேரத்தோடு அங்கு போய்ச் சேர்ந்தால், வெளிச்சத்தில் போட்டோக்கள் எடுக்கலாமே என்ற ஓர் எண்ணத்தில், திரும்பி வரும் போது துர்க்கையை தரிசித்துக் கொள்ளலாம். என்று தீர்மானித் தோம். கல்கத்தா நெடுஞ்சாலையில் கார் வேகமாக பறந்தது.

ஏலூரு, தாடபல்லிகூடம் முதலிய ஊர்களைக் கடந்து, தனுக்கு என்ற இடத்தை நெருங்கியதும் காரின் வேகம். சட்டென்று குறைந்தது. அரைத் தூக்கத்திலிருந்த நான் எட்டிப் பார்த்தேன். தெருவெங்கும் ஒரே கூட்டம். பேரிரைச்சல். வேறு ஒன்றுமில்லை. அன்று அந்த ஊரில் சந்தை நடந்து கொண்டிருந்தது.

அடுத்து 'சித்தாந்தம்' என்ற சிற்றூரைக் கடந்து கொண்டிருந்தோம். இங்கேதான் எங்கேயோ நெடுஞ்சாலையிலிருந்து அமலாபுரத்திற்குத் திரும்ப வேண்டும் என்று சென்னையில் நண்பர் கூறியிருந்தார். ஒரு வேளை பேச்சு வாக்கில் அந்த இடத்தைக் கடந்து வந்து விட்டோமோ என்ற சந்தேகம் எங்களுக்குத் திடீரென்று தோன்றவே காரை நிறுத்தினோம். கூட்டரில் அவ் வழியே போய்க் கொண்டிருந்த ஒருவரிடம் கேட்டேன்:

"அமலாபுரத்திற்கு எங்கே திரும்பவேண்டும்?"

"நேரே போங்கள். ராவுல பாலம் என்ற இடம் வரும் அங்கேயிருந்து அமலாபுரத்திற்கு கிழக்கே திரும்பவேண்டும்" என்றார்.

அங்கிருந்து அமலாபுரம் சுமார் இருபத்திரண்டு மைல் நாங்கள் எதிர் பார்த்ததிற்கு மேல் பெரிய ஊர். பரப்பரப்பான கடைவீதி. தங்கும் வசதிகளோடு கூடிய ஓட்டல்கள் இருந்தன. மும்முடி வரத்தில் தங்குவதற்கு வசதியில்லா விட்டால் இங்கு திரும்பி வந்துவிட வேண்டியதுதான் என்று மனத்திற்குள் முடிவுசெய்து கொண்டேன். அங்கிருந்து மும்முடிவரம் சுமார் எட்டு மைல்.

மணி ஏழுக்கு மேல் ஆகி விட்டிருந்ததால் குளிர் காற்று எங்களைத் தாக்கத் தொடங்கியது. தென்னை, கரும்பு, வாழைத் தோட்டங்கள் மண்டிக் கிடந்த ரம்மியமான கிராமியச் சூழ்நிலையில் பயணம் செய்த போது, களைப்பும் அசதியும் மறைந்து, உள்ளம் ஆனந்த லயிப்பில் மயங்கியது.

வழி நெடுகிலும் பெண்மணிகள் மார்கழி மாதத்தை யொட்டி தங்கள் இல்லங்களுக்கு முன்னால் நீர் தெளித்து, பெரிய கோலங்கள் போட்டுக் கொண்டிருந்தனர். அழகும் தூய்மையும் அன்பும் பண்பும் கோலாட்டம் போட்டு, கும்மியடித்து எங்களை வரவேற்றன.

''இது தான் மும்முடிவரம்'' என்றார் சுந்தரம்.

''அதோ, அது தான் பாலயோகியாரின் ஆச்ரமமாக இருக்க வேண்டும் : கலர் பல்பு தோரணங்களைப் பார்'' என்றேன் நான்.

அந்த வழியில் காரைத் திருப்பினார் பழநி. வயல்களை மெள்ள ஊர்ந்து சென்ற எங்கள் கார், வெண்மை நிற மண்டபத்தின் பின்புறம் போய் நின்றது. புன்னகையுடன் மகாதேவன் எங்களை வரவேற்றார்.

நாங்கள் சென்ற போது அங்கு சுமார் நூறு பேருக்கு மேல் கூடியிருந்தார்கள். எல்லோரும் மறுநாள் தரிசனத்திற்காக வந்திருப்பவர்கள். ஆகாரத்தை முடித்துக் கொண்டு அவரவர் படுப்பதற்கு இடம் தேடிக் கொண்டிருந்தார்கள்.

அரைக் கணத்தில் அந்த இடத்தை ஒரு ரவுண்டு சுற்றி விட்டு வந்த பாப்ஜி, ''ராத்திரி அமலாபுரமே போய் விட வேண்டியதுதான். குளிருக்கு அடக்கமாகப் படுப்பதற்கு இங்கே இடமே இல்லை'' என்றார் என்னருகில் வந்து.

நான் கமிட்டித் தலைவர் பாலசுந்தரத்தைத் தேடிக் கொண்டு போனேன். அவர் வேறு சில கமிட்டி மெம்பர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அவர்களை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

''சார், நாங்க அமலாபுரம் போய் இரவு தங்கிவிட்டு காலையில் வந்து விடுகிறோம். எத்தனை மணிக்கு யோகியாரின் தரிசனம் கிடைக்கும்?'' என்று கேட்டேன்.

"அதை இப்போ சொல்லமுடியாது. நாளைக்கு காலையிலேதான் தெரியும். முதல்லே கமிட்டி மெம்பர்கள் எல்லாம் கூடிப் பேசுவோம். அந்த கூட்டத்திலேதான் எப்போ கதவைத் திறக்கறதுன்னு முடிவு செய்வோம்" என்றார் பாலசுந்தரம்.

"சரி, அப்படின்னா காலையிலேயே வந்து ஸ்ரீ பால யோகியார் சம்பந்தப்பட்ட இடங்களையெல்லாம் பார்த்து விடுகிறோம். அப்படியே ஊரையும் சுற்றிப் பார்க்க வேண் டும். யாராவது எங்களுடன் வரவேண்டியிருக்கும்" என்றேன் நான்.

"ஓ, அதற்கென்ன, நாராயண மூர்த்தி இருக்கிறார். யோகியார் தபஸ்லே உட்கார்ந்த நாளிலிருந்து இந்த ஊரில் பழக்கப்பட்டவர். எல்லா இடங்களுக்கும் அவர் உங்களை அழைத்துக் கொண்டு போய்க் காட்டுவார்" என்று தலைவர் கூறவே, நாங்கள் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு அமலாபுரத்திற்குப் புறப்பட்டோம்.

மறுநாட் காலை ஒன்பது மணிக்கு மும்முடிவரம் வந்து சேர்ந்தோம். வெளிச்சத்தில் ஊரின் வளமும் வனப்பும் பன்மடங்காகப் பிரகாசத்தின. பேரமைதியில் ஆழ்ந்து, தவமியற்றுவதற்கென்றே அன்னை கோதாவரி அப் பகுதியைச் சோலைகள் நிறைந்த தவச்சாலையாக அமைத் துத் தந்திருக்கிறாள். பாலயோகி தவமியற்றிக் கொண்டி ருந்த மண்டபத்தைச் சுற்றிலும் ஜனநடமாட்டம் மிகுந் திருந்ததைக் கண்டேன். 'டூரிஸ்ட் பஸ்' ஸில் வந்து இறங்கியிருந்த ஒரு குழுவினர் எதிரில் ஓடும் வாய்க்காலில் நீராடிவிட்டு, தங்கள் ஆடைகளை உலர்த்திக் கொண்டி

ஆ—2

ருந்தனர். அன்று அங்கு வந்து கூடப் போகும் கூட்டத்தை எதிர்பார்த்து பலகாரக் கடைகளும், டீக்கடைகளும் ஒவ்வொன்றாகத் தோன்றிக் கொண்டிருந்தன.

அன்றைய தரிசனம் எங்களுக்கு மட்டும் தெரிந்த ரகசியம் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். மும்முடிவரம் வந்த பிறகுதான் அது எல்லோருக்குமே தெரிந்த ரகசியம் என்று புரிந்து கொண்டேன்!

தவச்சாலையை முதலில் வலம் வந்தோம். முன்மண்டபத்தின் ஓர் அறையில் பாலயோகியார் வடக்கு நோக்கி அமர்ந்திருக்கிறார் என்றும் பின்னால் உள்ள மண்டபத்தில் ஓர் அறையில் அவரது இளைய சகோதரர் சின்ன பாலயோகி அமர்ந்திருக்கிறார் என்றும் அறிந்து கொண்டோம். மூத்தவர் இருபத்தைந்து ஆண்டுகளாகத் தவமியற்றிக் கொண்டிருக்கிறார். இளையவர், பன்னிரண்டு ஆண்டுகளாக தவநிலையில் அமர்ந்திருக்கிறார். ஊண், உறக்கமற்ற அருந்தவம். அறிவுக்கெட்டாத அதிசயப் பெருந்தவம்.

இரண்டு மண்டபங்களையும் சுற்றிக் கட்டப்பட்டுள்ள மதிற் சுவரின் வடக்குப்புற வரயிலில் நுழைந்தோம். அங்கு பாலயோகியாரின் உருவச் சிலை வைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வோர் ஆண்டும் அவரது சிவராத்திரி தரிசனத்தின் போது எடுக்கப்பட்ட அவரது புகைப்படங்கள் சுவரில் வரிசையாக மாட்டப் பட்டிருக்கின்றன. நந்தி ஒன்று கிழக்குப் பார்த்து அமர்ந்திருக்கிறது. எல்லோரும் வந்து பாலயோகியாரின் சிலைக்கு நமஸ்காரம் செய்து விட்டுப் போகிறார்கள். சிலர் தேங்காய் உடைத்து சூடம் ஏற்றுகிறார்கள். பழவகைகளும் படைக்கிறார்கள். உருவச் சிலை மண்டபத்தின் மீதுள்ள 'பால்கனி'யிலிருந்து தான் ஸ்ரீபாலயோகி பக்தர்களுக்கு சிவராத்திரி தரிசனம் தருகிறார்.

நாங்கள் நின்ற இடத்தில் இருபுறமும் ரோஜா மரங்களைக் கண்டேன்! ஆமாம், மரம் போல் வளர்ந்திருக்கும் அச்செடிகளில் நூற்றுக் கணக்கில் பூக்கள் பூத்துக் குலுங்குகின்றன. அவற்றை யாரும் பறிப்பதில்லையாம். யோக நிலையத்தைச் சுற்றிலும் பூச்செடிகள் தாமாகவே செழித்து வளருவதைப் பற்றி அதிசயமாகக் கூறினார்கள்.

நாராயணமூர்த்தி எங்களைத் தேடிக்கொண்டு அங்கு வந்தார்.

''நீங்கள் இங்கேயா இருக்கிறீர்கள்? போகலாமா?'' என்றார்.

''எங்கே?'' என்று கேட்டேன்.

''பாலயோகி முதன் முதலில் தவ நிலையை அடைந்த தென்னந்தோப்புக்குப் போகலாம் வாருங்கள்'' என்று அவர் அழைக்கவே அவருடன் சென்றோம்.

கிடிகதல கங்கையா, மும்முடிவரம் கிராமச் சேரியில் தாழ்ந்த குடியில் பிறந்து வளர்ந்த ஓர் ஏழை விவசாயி. அவரது மனைவியார் திருமதி ராமம்மா. இருவரின் மூன்றாவது மகனாக, 1930-ம் வருஷம் அக்டோபர் மாதம் சஷ்டி தினந்தன்று பிறந்தவர் சுப்பாராவ். அப்பிள்ளை இள வயதிலிருந்தே 'தான் உண்டு தன் வேலை உண்டு' என்று இருப்பான். தந்தையுடன் சேர்ந்து மாடு மேய்த்து பிழைப்பு நடத்தி வந்த அச்சிறுவன், ஒரு நாள் திடீரென்று கண்களை மூடி நிஷ்டையில் ஆழ்ந்து பாலயோகியாகி விட்டான். பகவான் ரமணருக்கு மதுரையில் முதன் முதலில் மரண அனுபவம் ஏற்பட்ட அதே பதினாறாவது வயதில்!

அவர் நிஷ்டையில் அமர்ந்த அந்த தென்னந்தோப்பு தவயோக நிலையத்திற்குத் தெற்கே, மூன்று பர்லாங்

தொலைவில் இருக்கிறது. அங்கு மத்தியில் ஒரே ஒரு செவ் விளநி மரம் இருக்கும். இதர மரங்களிலெல்லாம் காய்கள் பச்சையாக இருக்கின்றன. இதர மரங்களை விட அந்த செவ்விளநி மரம் உயரமாக இருக்கிறது அம்மரத்தடியில் தான் பாலயோகி 1946-ம் ஆம் ஆண்டு தவமியற்றத் தொடங்கினார். அதன் அடையாளமாக அங்கு ஒரு சிறு அறையைக் கட்டி வைத்திருக்கிறார்கள்.

''பாலயோகி இளவயதில் 'பக்த போதனா' என்ற சினிமாவைப் பார்த்து விட்டுத்தான் இந்த நிலை எய்தி னார் என்று கூறுகிறார்களே, அதைப் பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா?'' நாராயணமூர்த்தியிடம் கேட்டேன்.

''அதைப் பாலயோகியாரே மறுத்திருக்கிறார். அப் போது 'நர நாரதர்' என்று ஒரு சினிமா நடந்து கொண்டி ருந்தது. அந்த சினிமா நோட்டீசில் நாரதர் படம் இருந்தது. அவர் அதைக் கத்தரித்து ஒட்டி வைத்துக் கொண்டிருந்ததாகக் கூறுவார்கள். ஒரு நாள் அதிகாலை மூன்று மணிக்கு வீட்டுக்குத் தெரியாமல் இங்கு வந்து உட்கார்ந்து விட்டார்.''

''அதுக்குப் பிறகு என்ன நடந்தது?''

''பையனைக் காணோமே என்று எல்லோரும் தேடி னார்கள். கடைசியில் இங்கே இருப்பது தெரிந்து ஓடோடி வந்து அவனை எழுப்பினார்கள். பையன் அசையவே யில்லை. கட்டையைப் போல் உட்கார்ந்திருந்தான். உடம்பு மேலே கட்டெறும்பெல்லாம் ஓடிக் கொண்டிருந்தது. அப்படியே தூக்கிக்கொண்டு போய் வீட்டுத் திண்ணையில் உட்கார வைத்தார்கள். அங்கேயும் அப்படியே உட்கார்ந்து கிட்டிருந்தார். ஊரெல்லாம் வந்து வேடிக்கை பார்த்தது. அதுக்கப்புறம்தான், இப்போ மண்டபம் இருக்கே, அங்கே

ஒரு சின்ன குடிசை போட்டு அவரை உட்கார வைத்தார்கள். இருபத்தைஞ்சு வருஷமா அப்படியே உட்கார்ந்து கிட்டிருக்கிறார்.''

பேசிக் கொண்டே யோக நிலையத்திற்குத் தெற்கேயிருக்கும் பாலயோகியார் பிறந்து வளர்ந்த சேரியைக் காண வந்தோம். இப்போது அது முற்றிலும் மாறி விட்டிருக்கிறது. பாலயோகியோர் பிறந்த குடிசையையும் காணோம். வைக்கோல் போர் ஒன்றைக்காட்டி, ''அங்குதான் பாலயோகி பிறந்த வீடு இருந்தது.'' என்று காட்டினார் நாராயணமூர்த்தி. அங்கு நினைவுச் சின்னம் ஒன்று எழுப்பப் போவதாகவும் கூறினார்.

பாலயோகியார் பிறந்து சில வருடங்களுக்குள்ளேயே அவர் தாயார் இறந்து விடவே, கங்கையா மறுமணம் செய்து கொண்டார். அந்த மனைவிக்கு ஐந்து பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்தனர். அவர்களில் மூத்தவரான நாக பூஷணம்தான் இளைய பாலயோகியாகத் திகழ்கிறார்.

ஸ்ரீ பாலயோகியின் இரண்டு மூத்த சகோதரர்களையும் அவரது சிற்றன்னையின் பிள்ளைகளையும் அங்கு சந்தித்தேன். அச் சகோதரர்களுக்கு அங்கு வீடுகள் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். சிலர் விவசாயத்திலும் சிலர் உத்தியோகங்களிலும் இருக்கிறார்கள். அவர்கள் குடும்பத்தினர் அன்று புத்தாடை அணிந்திருந்தனர். அன்று தந்தையின் திதியாம். எல்லோரும் ஊர்வலமாக அவரது கல்லறைக்குச் சென்று மரியாதை செலுத்தி விட்டு வருவதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீபாலயோகி அமர்ந்திருக்கும் மண்டபத்தைச் சுற்றிலும் ஒரே பரபரப்பாக இருந்தது. அங்கு சென்று விசாரித்துப் பார்த்தேன். வேறு ஒன்றுமில்லை. உள்ளே கமிட்டி மீட்டிங் நடந்து கொண்டிருந்தது. தரிசனத்திற்காக எப்போது பூட்டைத் திறப்பது என்பது அந்தக் கூட்டத்தில்தான் முடிவு செய்யப்படும் என்றும் அதை அறிவதற்காகத்தான் அத்தனை பேரும் ஆவலுடன் வெளியே காத்துக் கொண்டுருக்கிறார்கள் என்றும் அறிந்தேன்.

அந்த மண்டபத்தில், கீழே மொத்தம் ஆறு அறைகள். முன்புறம் மூன்று, பின்புறம் மூன்று. பின்னால் இருக்கும் நடு அறையில் ஒரு மேடையின் மீது ஸ்ரீபாலயோகி அமர்ந்திருக்கிறார். அதற்கு இடப்புறமும், வலப்புறமும் உள்ள அறைகள் சாத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. முன்னால் இடப்புறமிருக்கும் முதல் அறையில் கமிட்டி அங்கத்தினர்கள் கூடிப் பேசுவார்கள். அதன் மேற்குப்புறக் கதவு பூட்டப்பட்டிருக்கும். அதைத் திறந்து உள்ளே சென்று, யோகியார் அமர்ந்திருக்கும் அறைக் கதவைத் திறப்பார்கள். கமிட்டியினர் பாலயோகியுடன் பேசிய பிறகு, பக்தர்கள் தரிசனத்திற்குச் செல்வார்கள். மேலே 'பால்கனி'க்குப் போவதற்கு உள்ளுக்குள்ளேயே மாடிப்படி இருக்கிறது. அதன் வழியாகத்தான் பாலயோகி சிவராத்திரி தரிசனத்திற்கு வருகிறார். ஆனால், அவர் வருவதை யாரும் பார்க்க முடியாது.

அந்த மண்டபத்தில் ஸ்ரீபாலயோகி அமர்ந்திருக்கும் அறைக்கு மேலே, மாடியில் ஓர் அறை இருக்கிறது. எதிரில் ஒரு பெரிய ஹால் இருக்கிறது.

சென்ற ஆண்டுதான் பழைய கட்டடத்தை இடித்து இப்புதிய மண்டபத்தையெழுப்பியதாகவும், பாலயோகியார்

கூறிய 'பிளான்'படியே பதினைந்து நாட்களில் அது கட்டி முடிக்கப்பட்டதாகவும் திரு. பாலசுந்தரம் கூறினார். யோகியார் ஆலோசனைபடி முதன்முறையாக 'சென்ட்ரிங்' அடிக்காமலே இது கட்டப்பட்டதாகவும், எந்த மரத்தை உபயோகிக்க வேண்டும், அப்பலகைகளை எப்படிப் பொருத்த வேண்டும் என்ற விவரங்களையெல்லாம் யோகியாரே கூறியதாகவும் என்ஜினீயர் வியப்புடன் குறிப்பிட்டார்.

கமிட்டி மீட்டிங் முடிந்து மெம்பர்கள் வெளியேவந்தனர். அன்று இரவு ஒன்றரை மணிக்கு பூட்டைத் திறப்பது என்று கமிட்டி முடிவு செய்திருக்கும் செய்தியை தலைவர் தெரி வித்தார்.

நாங்கள் மண்டபத்தைச் சுற்றி வந்தோம். அதன் கிழக்கே ஒரு கட்டடம் இருக்கிறது. அது தியானமந்திர் அதன் நடுவே ஓர் அறை இருக்கிறது. அதில் நாகா சனத்துடன் ஒரு மேடை கட்டப்பட்டுள்ளது. எப்போ தாவது பாலயோகி அதில் வந்து அமர்ந்து தரிசனம் கொடுப்பார் என்ற எதிர்ப்பார்ப்புடன் அதை அங்கு அமைத்தார்களாம்.

அந்த அறையின் ஓர் மூலையில், நாரதர், ராமலிங்க சுவாமிகள், ஸ்ரீ சேஷாத்திரிசுவாமிகள் ஆகிய மூவரின் சிலைகளும் இருந்தன. அவை எதற்காக அங்கு வைக்கப்பட்டிருக்கின்றன என்ற அறியும் பொருட்டு விசாரித்தேன். ஏழெட்டு வருடங்களுக்கு முன் ராமமூர்த்தி என்னும் பக்தர் இவற்றை இங்கு கொண்டு வந்து ஊர்வலம் நடத்திவிட்டு அறையில் வைத்ததாகவும் ஒருவர் கூறவே, ராம மூர்த்தியைச் சந்தித்துப் பேசினேன்.

ஸ்ரீ பாலயோகி, ஸ்ரீ ராமலிங்க சுவாமிகள், ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் ஆகிய இரு மகான்களின் மறு அவதாரம்

என்று அவர் நம்புகிறார். அவர் பார்த்த ஏதோ ஒரு நாடி சுவடியில் அப்படிக் கூறப்பட்டிருக்கிறதாம்.

பின்னர் நாங்கள் மும்முடிவரம் கிராமத்தைச் சுற்றி வரப் புறப்பட்டுச் சென்றோம்.

அதைக் குக்கிராமம் என்று கூற முடியாது. சின்னஞ் சிறு டவுன் மாதிரி அது வளர்ச்சியடைந்திருக்கிறது. அங்கு சிறிய கடைவீதியொன்றும் இருக்கிறது.

அந்தக் கிராமத்தில் 'லங்க்ம்மா' என்ற அம்மனின் திருவிழா ஆண்டுதோறும் மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. பிழைப்புக்காகப் பிறரிடம் பணி புரிபவர்கள், அந்தத் திருவிழாவின் போதுதான் தங்கள் எஜமானர்களை மாற்றிக் கொள்வது வழக்கமாம். அது ஒரு சிறிய கோயில். அம்மனோ பெரிய அளவில் சாந்த சொருபியாக அமர்ந்திருக்கிறாள்.

அங்குள்ள கேசவப் பெருமாள் கோயிலில், துருவனின் தவப்பயனாய், ஸ்ரீ நாராயணன் அவருக்கு தரிசனம் தரும் பதுமை நம் கவனத்தைக் கவருகிறது. துருவனைப் போலவே, இரு பாலகர்கள் அங்கு தவத்தில் ஆழ்ந்துள்ள நிகழ்ச்சியை பிரதிபலிப்பது போலிருக்கிறது.

கடைவீதிக்கு தென்புறத்தில் ஒரு சிவாலயம் இருக்கிறது. அங்கு மகேச்வரரும் உமாதேவியாரும் திருக்கோயில் கொண்டிருக்கிறார்கள். பிராகாரத்தில் கால பைரவர், விநாயகர், துர்க்கை, காயத்ரி, ஸ்ரீ ஆதி சங்கரர் முதலிய மூர்த்திகள் இருக்கின்றன. ஸ்ரீ பாலயோகியின் மண்டபத்துக்கு செல்லும் வழியில் கொன்னாலம்மன் கோயிலும் ஸ்ரீ ராம பஜனை மடமும் இருக்கின்றன.

அங்கே புலுசு புச்சராஜுகாரு என்ற மும்முடிவரம் வாசியைச் சந்தித்தும் பேசினேன்.

ஆரம்ப நாட்களில் பாலயோகி அன்ன ஆகாரமின்றி அமர்ந்திருப்பதைக் குறித்து அவருக்குப் பெரிய சந்தேகம் ஏற்பட்டதாம். இதில் ஏதோ சூதும் மோசடியும் இருக்குமோ என்று கண்டுபிடிப்பதற்காக ஆறுமாதங்கள் கண்குத்திப் பாம்பாக அந்த இடத்தைக் கண்காணித்தாராம். பாலயோகிக்கு ஒருவரும் ரகசியமாக ஆகாரமோ குடிநீரோ கொடுக்கவில்லை என்றும், அவர் சத்தியமாகவே பசி, தர்கம், தூக்கம் இன்றி நிட்டை கூடியுள்ளார் என்றும் தமக்கு நிச்சயம் ஆயிற்றாம்.

பூட்டியிருக்கும் அறையின் கதவுகள் தாமே கழன்று மேலும் கீழும் ஏறி இறங்கியதை தன் கண்ணால் பார்த்திருக்கிறாராம், சில நாட்கள் அறையிலிருந்த சிறு துவாரம் வழியாக, அபிஷேகம் செய்த பாலும் தேனும் மஞ்சள் நீரும் ஓடி வருமாம். சாம்பிராணிப் புகையின் வாசனை நாசியைத் துளைக்குமாம். புச்சராஜுகாரு விவரித்தார்.

பின்னர், தொண்ணூறு வயதான மட்டபர்த்தி வெங்கன்னாகாருவைச் சந்தித்தேன். அவரிடம் மாடு மேய்க்கும் சிறுவனாக வேலைபார்த்த போதுதான் 1946-ம் ஆண்டில் சுப்பாராவ் (யோகியார்) ஒருநாள் விடியற்காலை தென்னந் தோப்புக்குச் சென்று தியானத்தில் ஆழ்ந்தாராம்.

கிழவர் கூறினார்; "பையன் ரொம்ப சாது. ரெண்டு வேளையும் இங்கேதான் சாப்பிடுவான். சிவந்த மேனியுடன் பையன் பார்ப்பதற்கு அழகாயிருப்பான், நாங்கள் அவனை 'பண்டு பண்டு' என்றுதான் கூப்பிடுவோம். (பண்டு என்றால் பழம் என்று பொருள்)

உடன் இருந்த யோகியாரின் மூத்த சகோதரர் வெங்கண்ணா, தம்பிக்கு சம்பளம் கிடையாது என்றும், கிழவரிடம் தமது தந்தை வாங்கியிருந்த முப்பது ரூபாய் கடனைக்

கழிக்க தம்பி அவரிடம் வேலை செய்ததாகவும், தம்பியின் நிலை மாறிய பிறகு, மீதி கடனை அடைக்க தாமே மாடு மேய்த்து வந்ததாகவும் கூறினார்.

மீண்டும் மண்டபத்தை அடைந்த போது, தலைவர் பாலசுந்தரம் அவர்களிடம், இரவு ஒன்பதரை மணிக்கு கதவைத் திறந்து விடுவீர்கள் அல்லவா? என்று கேட்டேன்.

''இல்லை. ஒரு சிறு மாறுதல். கமிட்டி மீண்டும் பத்து மணிக்குக் கூடப்போகிறது. சுமார் பதினோரு மணிக்கு பூட்டைத் திறக்கலாம் என்றிருக்கிறோம். ஆனால் கதவு எப்போது திறக்குமோ தெரியாது. பூட்டைத் திறப்பது எங்கள் கையில் இருக்கிறது. ஆனால் கதவு திறந்து கொள்வது யோகியார் சித்தத்தைப் பொறுத்தது'' என்றார் திரு பாலசுந்தரம்.

நேரம் ஆக ஆக ஸ்ரீ பாலயோகி ஆச்ரமத்தைச் சுற்றிப் பக்தர் கூட்டம் அதிகமாகிக் கொண்டேயிருந்தது. போலீஸ் படையினரும் ஜீப்புக்களிலும் லாரிகளிலும் வந்து இறங்கிக் கொண்டிருந்தனர்.

தியான மந்திருக்கு வெளியில் பாட்டுக் கச்சேரிகளும், காலட்சேபங்களும் அடுத்து அடுத்து நடந்து கொண்டிருந்தன. ஒருவர் பாலயோகியின் வாழ்க்கை வரலாற்றையும் யோக நிலையையும் பற்றி இனிமையான தெலுங்கில் உபந்நியாசம் செய்தார். ஆந்திர நாதசுர வித்வான்கள் இருவர் சுநாதத்துடன் தேனிசை பொழிந்து கொண்டிருந்தனர்.

கையில் பலகாரங்கள் கொண்டு வந்திருந்தவர்கள் குடும்பத்தோடு வட்டமாக உட்கார்ந்து கொண்டு ரசித்துப் புசித்துக் கொண்டிருந்தனர். நல்ல குளிரானதால் அவரவர்கள் கையில் கிடைத்த கம்பளியையும் துப்பட்டியையும்

உடல் முழுவதும் சுற்றிக் கொண்டிருந்தனர். நள்ளிரவுக்கு மேல் தான் தரிசனம் கிடைக்கும் என்று தீர்மானித்த பலர், கிடைத்த இடங்களில் குளிருக்கு அடக்கமாக முடங்கிக் கொண்டார்கள். அன்று கமிட்டி மெம்பர்களுக்கு ஏகப்பட்ட கிராக்கி. ஒவ்வொருவரைச் சுற்றியும் பத்துப் பதினைந்து பேராவது நின்று கொண்டிருந்தனர். அவர்கள் தயவு இருந்தால் ஸ்ரீ பாலயோகியை அருகில் தரிசனம் செய்யலாமே!

எட்டரை மணியிருக்கும். நான், பாப்ஜி, சுந்தரம் மூவரும் ஓர் ஓரமாக உட்கார்ந்து கொண்டு, நாதசுர இசையை மெய்மறந்து ரசித்துக் கொண்டிருந்தோம். அப்போது எங்களைத் தேடிக் கொண்டு அங்கு வந்த மகா தேவன்; "என்ன இங்கே உட்கார்ந்திருக்கீங்க? கமிட்டி மெம்பர்களெல்லாம் ரெடியாயிட்டாங்க. நாமும் இப்பவே அறைக்கு வெளியே போய் உட்கார்ந்துடுவோம். அப்புறம் கூட்டம் அதிகமாயிடும். உள்ளே போக முடியாது. எழுந் திருங்க" என்று எங்களை அவசரப்படுத்தினார்.

"என்ன, இப்பவே பூட்டைத் திறந்துடப் போறாங் களா?" என்று கேட்டேன் நான்.

"இல்லே இல்லே. பூட்டைத் திறக்கப் பத்துப் பத்தரை மணி ஆகும். நாம் கமிட்டி அறைக்கு வெளிப்புறத்திலே உள்ள இடத்தில் உட்கார்ந்திருப்போம். கமிட்டி மெம்பர்கள் பூட்டைத் திறந்து உள்ளே போய் சாமியாருடன் பேசிய பிறகு, முதல்லே காம்பௌண்டு சுவருக்குள்ளே இருக் கிறவங்களைத் தரிசனத்துக்கு விடுவாங்க. அதுக்கப்புறம் எல்லோரும் பார்க்கலாம். நாம் முதல்லேயே அங்கே போய் உட்கார்ந்துட்டா, ஈஸியா தரிசனம் பண்ணலாம். போட்டோ எடுக்கறத்துக்கும் சௌகரியமாகியிருக்கும்" என்றார் மகாதேவன்.

நாங்கள் உடனே எழுந்து அவரைப் பின் தொடர்ந்தோம். போலீஸ்காரர் வெளியே நிற்க, ஒவ்வொருவராக வடிகட்டி உள்ளே அனுமதித்துக் கொண்டிருந்தார்கள். தெலுங்கிலும் இங்கிலீஷிலும் எதையோ பேசி நாங்களும் எப்படியோ உள்ளே போய் உட்கார்ந்து விட்டோம். சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கேயிருந்த கமிட்டி மெம்பர்கள் ஒவ்வொருவராக கமிட்டி அறைக்குள் சென்றார்கள். கதவு சாத்தப்பட்டது. வெளியே காவலலுக்கு இரு போலீஸ் காரர்கள் நிறுத்தி வைக்கபட்டனர்.

நாங்கள் உட்கார்ந்திருந்த இடம் நிரம்பிக்கொண்டே இருந்தது. ஏதாவது ஒரு கமிட்டி மெம்பர் பெயரைச் சொல்லிக் கொண்டு, சண்டை பிடித்து, கூச்சல் போட்டு, ஒவ்வொருவராக எப்படியோ உள்ளே நுழைந்து கொண்டிருந்தனர். முதலில் நாங்கள் இருபது பேர்தான் உள்ளே இருந்தோம். இப்போது நூறு பேராகி விட்டோம். காம்பௌண்டுக்கு வெளியே பெருங் கூச்சல். முண்டியடித்துக் கொண்டு உள்ளே நுழைய முயன்றவர்களுக்கும் போலீஸ் அதிகாரிகளுக்குமிடையே வாய்ச் சண்டை வலுத்துக் கொண்டிருந்தது.

மணி பத்தாகி விட்டது. கமிட்டி அறையில் என்ன நடக்கிறது என்பதை அறிவதிலேயே எல்லோரும் கவனமாக இருந்தோம்.

சற்றைக்கெல்லாம், லேட்டாக வந்த கமிட்டி மெம்பர் ஒருவர், மீட்டிங்கில் கலந்து கொள்வதற்காக அறைக் கதவைத் தட்டினார். அவரிடம் ஓடி, ''தலைவர், பூட்டைத் திறக்கும் போது என்னிடம் தயவு செய்து சொல்லுங்கள். நான் அதை போட்டோ எடுக்க வேண்டும்'' என்று கெஞ்சாத குறையாகக் கேட்டுக் கொண்டார் சுந்தரம் 'சரி' என்பது போல் தலையை அசைத்து விட்டு அவர்

உள்ளே சென்றார் அவ்வளவு தான். அதற்குப் பிறகு அவர் வெளியே தலையைக் காட்டவேயில்லை!

கமிட்டி அறையின் கதவு மீண்டும் திறந்தது. வேறொரு மெம்பர் அவசரமாக வெளியே வந்தார். தன்னைக் கூப்பிடத்தான் அவர் வந்திருக்கிறார் என்ற மகிழ்ச்சியுடன் சுந்தரம் அவரை நெருங்கி ஏதோ கேட்டார். அவர் பதிலே சொல்லாமல், காம்பௌண்டுக்கு வெளியே நின்று கொண்டிருந்த சில நபர்களை உள்ளே விடும்படி போலீஸ்காரரிடம் சிபாரிசு செய்து விட்டு, மீண்டும் கமிட்டி அறைக்குள் போய் விட்டார்!

நாங்கள் உட்கார்ந்திருந்த இடத்தில் நெரிசல் அதிகமாகி விட்டது. நூறு, இருநூறு ஆகிவிட்டது.

"உள்ளே என்ன நடக்குதுன்னே தெரியலையே. இவங்க மீட்டிங் முடிஞ்சு, பூட்டைத் திறந்தாங்களா இல்லியான்னு கூட தெரியமாட்டேங்குதே. மணி பதினொன்னு ஆகப்போறதே" என்றார் பாப்ஜி.

"ஒண்ணும் சொல்லமுடியாது சார். உள்ளே போயிட்டா அவங்களுக்கு வேறே ஒண்ணுமே தோணாது. பூட்டைத் திறந்துட்டு, கதவு எப்போ திறக்குமோன்னு காத்துக் கிட்டிருக்காங்களோ என்னவோ! சாமியார் மனசு வைக்கலேன்னா நாம் எத்தனை அழுத்தித் தள்ளினாலும் கதவு திறக்காது. இரண்டு மணி, நாலு மணி நேரம் கூட ஆகும். சில சமயம் இரண்டு நாள்கூட காத்துக்கிட்டிருக்க வேண்டிருக்கும்" என்று கூறினார் அருகில் உட்கார்ந்திருந்த திரு நடராஜன். அவர் ரிடையராகி விட்ட ஓர் ஐ. ஏ. எஸ். அதிகாரி. பல வருடங்களாகப் பாலயோகியின் தரிசனத்திற்காக மும்முடிவரம் வந்து கொண்டிருப்பவர்.

மணி பன்னிரண்டாகி விட்டது. வெளியில் இருப்பவர்கள் பொறுமையை யிழக்கத் தொடங்கினார்கள். 'எப்போது

உள்ளே அனுமதிப்பார்கள்? எப்போது பாலயோகியின் தரிசனம் கிடைக்கும்' என்ற எண்ணமே எல்லோர் உள்ளத்திலும் ஒலித்துக் கொண்டிருந்தது.

அப்போது வெளியேயிருந்து நடக்க முடியாமல் தள்ளாடிக் கொண்டு ஒருவர் வந்தார். இருவர் அவரைப் பிடித்துக் கொண்டு வந்தனர். அவர் ஒரு கமிட்டி மெம்பர். உடல் நலமின்றி இருக்கும் அவர், கிடைத்தற்கரிய அந்த வாய்ப்பை நழுவவிட மனமில்லாமல் தரிசனத்திற்காக வந்திருக்கிறார். அவரை உள்ளே அழைத்துச் சென்று உட்கார வைப்பதற்காக அவருடன், யோகியின் இளைய சகோதரான பெரிய சுப்பராஜு கமிட்டி அறைக்குள் சென்றார். ஐந்து நிமிடங்களுக்கெல்லாம் வெளியே வந்தார்.

"உள்ளே என்ன நடந்துகிட்டிருக்கு என்று அவரைக் கேட்டுப் பார்க்கலாமே சார்' என்று நடராஜனிடம் கூறினார் பாப்ஜி.

நடராசன் பெரிய சுப்பராஜுவை அழைத்து "இன்னுமா கமிட்டி மீட்டிங் நடந்து கொண்டிருக்கு, பூட்டைத் திறந்தாங்களா, இல்லையா? என்று கேட்டார்.

அந்த நபர் சிரித்துக் கொண்டார்.

"அவங்க உள்ளே போய் இரண்டு மணிக்கு மேலே ஆகிறது. எல்லாரும் சாமியார் கிட்டே பேசிகிட்டிருக்காங்க. இன்னிக்குப் பூட்டைத் திறந்தவுடனேயே கதவு திறந்து கொண்டு விட்டதாம்'' என்றார் அவர். எங்கள் எல்லோர் முகத்திலும் அசடு வழிந்தது.

# பாலயோகி என்றும் புதிர்

கமிட்டி மெம்பர்கள் சாமியாருடன் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி, 'குடிசைத் தீ' யைப் போல் பரவி விட்டது,

இப்போது எல்லோருக்கும் புது நம்பிக்கை பிறந்தது. அருகில் தூங்கிக் கொண்டிருந்தவர்களை எழுப்பினார்கள். எந்த நிமிடமும் தரிசனத்திற்காக உள்ளே அனுமதிக்கப் படலாம் என்று தயார் நிலையிலிருந்தார்கள்.

"கமிட்டி மெம்பர்கள் சாமியாருடன் சாதாரணமாக எத்தனை மணி நேரம் பேசுவார்கள்?" என்று நடராஜனிடம் கேட்டேன் நான்.

அது சொல்ல முடியாது. வெளியே நிறைய கும்பல் இருந்தால், முதலில் தரிசனத்தை முடித்து விட்டுப் பிறகு பேசலாம் என்று சாமியாரே சொல்லி விடுவார். பேச்சுக்குப் பிறகுதான் தரிசனம்னு முடிவாச்சுன்னா விடியற்காலை நாலு அஞ்சு கூட ஆகலாம் என்றார் நடராஜன்.

திடீரென்று போலீஸ் கெடுபிடி அதிகமாயிற்று. யாரோ முக்கியமான அதிகாரி வரப்போகிறார் என்பது புரிந்து விட்டது. 'வருவது யார்?' என்று அறியும் ஆவலில் எல்லோரும் எட்டி எட்டிப் பார்த்தனர். பெரிய போலீஸ் அதிகாரிகளும் அரசு உயர் அதிகாரிகளும் நட்பும் சுற்றமும் சூழ வந்தார்கள். சற்றைக்கெல்லாம் மந்திரியாருவர் வந்தார். வழக்கப்படி பின்னாலேயே ஒரு கூட்டமும் வந்தது.

"இவர்களும் வெளியே காத்திருக்க வேண்டியது தானா?" என்று நடராஜனிடம் கேட்டேன்,

"அதிலே என்ன சந்தேகம்? எத்தனையோ பெரிய பெரிய புள்ளிகளெல்லாம் சாமியார் கண்களைக் திறக்கும்போது பார்க்க வேண்டும் என்று முயன்று பார்த்தார்கள் முடியவில்லை. சாமியார் கமிட்டி மெம்பர்களுடன் மட்டும்தான் கண்ணைத் திறந்து சைகையின் மூலம் பேசுகிறார்"

இரண்டு மூன்று கமிட்டி மெம்பர்கள் பாலயோகியின் அறையிலிருந்து வெளியே வருவதும் உள்ளே போவதுமாக இருந்தார்கள். அவர்கள் வெளியே வரும்போதெல்லாம் பத்து பதினைந்து பேர் அருகில் ஓடி சென்று எதையோ ரகசியகாக விசாரித்துக் கொண்டிருந்தார்கள். ஓட்டுகளை எண்ணும் கட்டிடத்திற்குள்ளிருந்து யாராவது வெளியே வந்தால், வெளியே இருப்பவர்கள் அவரிடம் ஓடிக் சென்று நிலவரத்தை அறிய துடிக்கும் காட்சி என் கண் முன்னால் விரிந்தது!

மணி ஒன்று அடித்தாகி விட்டது. காம்பௌண்டுக்கு வெளியே கூட்டம் பெருகி வருவதற்கு அடையாளமாக பெருங் கூச்சல் கேட்டது. அவர்களை அடக்கும் போலீஸ் காரர்களின் இரைச்சல் அதைவிட அதிகமாகக் கேட்டது. நாங்கள் உட்கார்த்திருந்த இடத்திலும் 'சலசல'ப்புத் தோன்றியது. ஒவ்வொருவராக கமிட்டி அறையினுள் நுழையத் தொடங்கினர். அந்த அறை நிரம்பி வழிந்தது. வைகுண்ட ஏகாதசிக்கு சுவர்க்க வாசல் திறப்பதற்கு முன் பக்தர்களிடையே தோன்றும் பக்திப் பரவசத்தையும், முண்டி அடித்துக் கொண்டு முதலில் செல்லத் துடிக்கும் ஆவேச ஆர்வத்தையும் அங்கு காண முடிந்தது.

சரியாக ஒன்றரை மணிக்கு தரிசன அறைக் கதவைத் திறந்து விட்டார்கள். 'திபு திபு' வென்று கூட்டம் உள்ளே நுழைந்தது. பெரியவர், சிறியவர், பணக்காரர், ஏழை,

ஆண், பெண், மந்திரி, அதிகாரிகள், சிப்பந்திகள் எல்லோரும் ஒரே வேகத்துடன் உள்ளே பாய்ந்து சென்றனர். நாங்கள் வாசற்படியில் சிக்கிக் கொண்டோம். சுந்தரம் காமிராவை உயரத்தூக்கிப் பிடித்து நர்த்தனம் ஆடினார். 'ரண்டி' 'வாங்க' 'யு கம்மின்' என்று ஒருவர் கையை மற்றொருவர் பிடித்துக் கொண்டு உள்ளே இழுத்துக் கொண்டிருந்தனர். எங்கள் கையை யார் யாரோ பற்றி இழுத்தார்கள். ஒரே குழப்பம், ஒரே கலவரம், ஒரே கூச்சல், ஒரே களேபரம்....!

அத்தனை அமளி துமளிகளுக்கிடையே தரிசன அறைக்குள் நுழைந்ததும் பேரமைதியை தரிசித்தேன். உலக பேரிரைச்சலிலிருந்து வெகுதூரம் விலகி, அந்தரங்க குகைக்குள் ஒடுங்கி யோக சமாதியில் நிலைத்து, பிரும்மத்தோடு ஒன்றி, ஆழ்த்த ஆனந்தானுபவத்தில் லயித்து அசையாமல் மூல விக்ரகமாய் தவக்கோலத்தில் அமர்ந்திருந்த பாலயோகியைக் கண்டதும், சூரியனைக் கண்ட பனிபோல், மற்ற எல்லா எண்ணங்களும் விலகி, நம் உள்ளே இயங்கும் ஆன்ம சக்தியின் மெய்யுருவை வெளியே காண்பது போல் ஓர் உணர்வு மேலிட்டது.

புகைப் படங்களில் பார்த்து பார்த்து பழக்கப்பட்டுப் போன உருவமானதால், முதலில் அத்தோற்றம் என்னை அதிசயத்தில் ஆழ்த்த வில்லை. ஆனால் இருபத்தைந்து ஆண்டுகளாக, இதே யோக நிலையில் இதே இடத்தில் ஊண் உறக்கமின்றி, காற்று, வெளிச்சம் இன்றி இவர் உட்கார்ந்துக் கொண்டிருக்கிறார் என்பதை ஒரு கணம் நினைத்ததும் பேராச்சரியத்தில் மூழ்கி, பிரமித்து நின்றேன். "இவர் எப்படி இவ்வாறு இருக்கிறார்?" என்ற கேள்வியே மீண்டும் மீண்டும் எழுந்தது. விடைகாண முடியவில்லை. மாறாக, சிந்தனையோட்டமே தடைப்பட்டு, புரியாத அந்தப் புதிருக்கு முன்னால் மௌனமாக நின்றேன்.

புராதனகால மகரிஷிகளைப் போல், ஸ்ரீ பாலயோகி யோக நிட்டை கூடிய மோன தவத்தில் ஆழ்ந்திருந்தாலும், சுற்றுப்புறமும் சூழ்நிலையும் நவீனமாகத்தான் இருக்கிறது. அந்த அறையின் சுவர்களிலும், அவர் அமர்ந்திருக்கும் மேடையிலும், படிக்கட்டுகளிலும், தரையிலும் வழுவழுப் பான, பளபளப்பான வெள்ளைக் கற்கள் பொருத்தப்பட்டி ருக்கின்றன. அதனால் மின்விளக்கு வெளிச்சத்தில் அந்த அறையே பளிச்சென்று 'டால்' அடிக்கிறது. அந்த வெண்ணிறப் பின்னணியில் அவர் அமர்ந்திருப்பது, பாற் கடலில் பொற்றாமரை மலர்ந்தாற் போலிருக்கிறது.

ஓரடி கனத்தில் ஏழு எட்டு அடி நீளமுள்ள அவரது கருமையான தலைமுடி, சடையாக இல்லாமல், யாரோ நன்றாக சீவி விட்டாற்போல் வெகு சீராக இருக்கிறது.

அம்மேடையில் விரிக்கப்பட்டிருக்கும் பெரிய புலித் தோலின் மீது பாலயோகி அமர்ந்திருக்கிறார். அது தருமபுர ஆதீனத்தாரால் அன்பளிப்பாக அளிக்கப்பட்ட தாம். புலித் தலை பெரிதாக பயங்கரமாக இருக்கிறது.

மேடையின் கிழக்குப் புறத்தில் ஒரு சிறிய கிருஷ்ணன் பொம்மை வைக்கப்பட்டிருக்கிறது.

ஒரு கணம் கண்களை மூடிக் கொண்டேன். குழலூதும் அந்தக் கிருஷ்ணப் பதுமை மறைந்து, அந்த இடத்தில் சங்கு, சக்கரம் ஏந்திய ஸ்ரீமத் நாராயணன் விச்வரூப மெடுத்து, கம்பீரமாக நின்றார்.

கண்களைத் திறந்தேன். பாலயோகியின் முகத்தில் தவழ்ந்த ஆழம் காண முடியாத அமைதியை அப்படியே அள்ளிப் பருகினேன். அவருடைய திரண்ட தோள்களை, உருண்ட கரங்களை, அகன்ற மார்பை, நீண்ட விரல் களை வைத்த கண் வாங்காமல் பார்த்து, உள்ளம்

பூரித்தேன். 'இருபத்தைந்து ஆண்டுகளாக இவர் பசி, தாகமின்றி இருக்கிறாரா? நம்ப முடியாத அதிசயமாக வல்லவா இருக்கிறது! இந்த விஞ்ஞான யுகத்தில் இப்படியும் ஒரு விந்தையா? மனிதப் பிறவி எடுத்த ஒருவரால் இப்படி இருக்க முடியுமா? மனிதன் சந்திரனில் காலடி எடுத்து வைத்ததை அதிசயத்திலும் அதிசய சாதனை யாகப் பேசுகிறார்களே, ஆன்ம சக்தியின் இந்தச் சாதனைப் பற்றி இந்தப் பகுத்தறிவு உலகம் என்ன சொல்கிறது?

எத்தனை தடுத்தாலும் அடங்காத என் சிந்தனைச் சுருள் மீண்டும் கேள்விச்சுழலில் சிக்கிக் கொண்டது. புரியாத புதிருக்கு விடை காண முடியாமல் திண்டாடி னேன். எனக்குத் தலையைச் சுற்றியது.

அறையை ஒரு நோட்டம் விட்டேன். அங்கு பெரிய ஜன்னல்களே இல்லை. மேடையை ஒட்டினாப்போல் உள்ள சுவரில் இருபுறமும் 'வென்டிலேட்டர்'கள் போல் இரண்டு சிறு ஜன்னல்களே இருந்தன. அதன் கதவு களும் தாளிடப் பட்டிருந்தன. இரு புறமும் உள்ள அறை களின் கதவுகளும் நன்கு சாத்தப்பட்டே இருந்தன.

அந்த அறைக்குள் பழைய புத்தகங்களும், சாமி யாருக்கு அன்பர்கள் அன்பளிப்பாக அளித்த வேட்டிகளும் இருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

பாலயோகியின் திருமேனியை உற்றுக் கவனித்தேன். அவர் நீராடி இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றனவாம்! ஆனாலும் சற்று முன்புதான் குளித்து விட்டு, தலையைச் சீவி, புத்தாடையுடுத்தி மேடையில் வந்து அமர்ந்தது போல் அத்தனை நேர்த்தியாக 'ஜம்' மென்று காட்சி யளித்தார். முதன் முதலில் அந்த இடத்தில் வந்து அமர்ந்த போது, ஒரு மாத காலம் எதிரிலுள்ள கோதாவரி

வாய்க்காலில் தினமும் நீராடிவிட்டு வருவாராம். அதற்குப் பிறகு அதையும் விட்டு விட்டாராம். அந் நாட்களில் அறை ஜன்னலில் அவரது தந்தையார் சிறு தம்ளரில் கொஞ்சம் பால் கொண்டு வந்து வைப்பாராம். சில நாள் தம்ளர் காலியாக இருக்குமாம். அதன் பிறகு அந்தப் பழக்கமும் நின்று விட்டதாம்.

முதன் முதலில் பாலயோகி அமர்ந்திருந்த அறைக்குப் பூட்டுச்சாவி கிடையாது. இரண்டு ஆண்டு எட்டு மாதங்கள் யோக நிட்டையில் அமர்ந்திருந்து விட்டு, ஒரு நாள் கண் விழித்து அங்கிருந்த ஒருவரிடம், பக்தர்கள் தம்மைத் தொட்டுக் கும்பிடுவதால் ஏகாந்த தியானத்திற்கு இடையூறு விளைவதாகக் கூறி, தம் அறையைப் பூட்டியே வைக்கும் படி கேட்டுக் கொண்டார். பின்னர், தினமும் விடியற் காலை நாலு மணி முதல் ஆறு மணி வரை பக்தர்களுக்குத் தரிசனம் தர ஒப்புக் கொண்டார். மக்கள் ஒழுங்காக நடந்து கொள்ளாததால் ஒரு நாள் அதையும் நிறுத்திக் கொண்டு விட்டார்.

அறையைப் பூட்டி வைப்பது குறித்து உறவினர் களிடையேயும், உள்ளூர்க்காரர்களிடையேயும் சிறு கருத்து வேற்றுமை தோன்றியது. அதற்காகப் போலீஸ் வர வேண்டி யிருந்தது. அதனால்தான், அப்போது கிழக்குக் கோதா வரி மாவட்டக் கலெக்டராயிருந்த டி. பாலசுந்தரம் ஐ. ஏ. எஸ். அவர்கள் மும்முடிவரத்திற்கு வர நேர்ந்தது. அதற்குப் பின்னர்தான் கமிட்டியே ஏற்பட்டது. சிவராத் திரிக்கு மறுநாள் காலை நான்கு மணியிலிருந்து நள்ளிரவு பன்னிரண்டு மணி வரையில் மக்களுக்குத் தரிசனம் தர பாலயோகி ஒப்புக் கொண்டார். அந்தத் தரிசனத்திற்கான ஏற்பாடுகளைப் பற்றி சாமியாருடன் கமிட்டி கலந்து பேசும் பழக்கம் ஏற்பட்டது. அதற்கு 'சிவராத்திரிக்கு முந்திய தரி சனம்', என்ற பெயரும் சூட்டப்பட்டது.

அந்த தரிசனத்தை நான் கண்டு களித்துக் கொண்டிருந்தேன். சிலையென அமர்ந்திருந்த பாலயோகியின் உதடுகள் லேசாக அசைந்தன. எச்சிலை விழுங்குவது போல கழுத்து லேசாக, மிக மிக லேசாக இயங்கியது. இடக்கை பெரு விரல் ஆடியது. இடக்கால் பெரு விரல் ஆடியது, அச்சிறு அசைவுகளே நம் உள்ளத்தில் பேரின்பக் கிளர்ச்சியைத் தூண்டும் போது, அவர் தம் கண்களைத் திறந்து, கைகளை வீசிப் பேசுவதைப் பார்க்கும் போது எத்தனை குதூகலகாக இருக்கும்! உண்மையிலேயே அந்தக் கமிட்டி மெம்பர்கள் கொடுத்து வைத்தவர்களே!

அந்த அறைக்குள் மேடைக்கு மிக அருகிலேயே நின்றிருந்தேன். அங்கு நின்றும், 'இன்னும் கொஞ்சம் நெருங்கிச் செல்ல வேண்டும். வெகு அருகில் சென்று தரிசிக்க வேண்டும்' என்றே தோன்றியது. ஆனால், அந்தப் பரிசுத்தமும், தவக் கனலின் வெம்மையும் என்னுள்ளே ஒரு அச்சத்தைத் தோற்றுவித்து, இன்றும் அருகில் செல்ல விடாமல் தடுத்து விட்டது.

முன் அறையில் இருந்த கூட்டம் கூச்சலிட்டுக் கொண்டிருந்தது. பொங்கிப் பெருகிய உற்சாகப் பூரிப்பில் ஒரு மகானின் நிழலில் நிற்கிறோம் என்பதைக் கூட மறந்து அவர்கள் ஏதோ 'காச் மூச்' சென்று கத்தினார்கள். சில்லறை நாணயங்களை மேடையின் மீது வீசியெறிந்தார்கள். கன்னத்தில் போட்டுக் கொண்டார்கள். கீழே விழுந்து விழுந்து கும்பிட்டார்கள். அங்கிருந்து நகரவே அவர்களுக்கு மனமில்லை. புதிதாக உள்ளே நுழைந்தவர்கள், ஏற்கனவே அங்கு இருந்தவர்களைத் துரத்தினார்கள். ஆனால், அவர்கள் எப்படி வெளியே போவது? வெளியே செல்லும் வாயிற்படியை அடைத்துக் கொண்டு அவ்வழியாக வந்த ஒரு கூட்டம் குறுக்கே நிற்கிறதே! ஒரே போக்குவரத்து நெரிசல், இரைச்சல், குழப்பம், அமளி துமளி!

ஆனால், பேரிரைச்சலோடு தாக்கும் பேரலைகளுக்கிடையே நிமிர்ந்து, அமைதியாக நிற்கும் கலங்கரை விளக்கம் போல் பாலயோகி, அங்கு சாந்தமாக, ஆன்மீக ஒளியைப் பரப்பிக் கொண்டிருந்தார்.

நாங்கள் மூவரும் எப்படியோ வெளியே வந்து சேர்ந்தோம். அடுத்து, இளைய பாலயோகியின் தரிசனத்திற்குச் செல்ல வேண்டும். பின் புறத்தில் தனி மண்டபத்தில் ஓர் அறையில் அவர் அமர்ந்திருக்கிறார். பெரிய பாலயோகியின் தரிசனம் தொடங்கியதும் இளையவரது அரைக் கதவையும் திறந்து விடுகிறார்கள். சிவராத்திரிக்கு மறுதினம் அவருடைய தரிசனமும் மக்களுக்கு சௌகரியமாகக் கிடைக்க வேண்டும் என்பதற்கு அவருக்கும் ஒரு தர்சன மந்திர் கட்டி வைத்து, பெரியவரைப் போலவே இவரும் விடியற்காலையில் தர்சன மந்திரில் வந்து அமர வேண்டும் என அவரிடம் கேட்டுக் கொண்டார்கள். ஆனால், அவர் அந்த 'பால்கனி' யில் வந்து அமர மறுத்து விட்டாராம். விரும்புகிறவர்கள் தாம் அமர்ந்திருக்கும் அறையிலேயே வந்து தம்மைத் தரிசிக்கும்படி கண்டிப்பாகச் கூறிவிட்டாராம்.

இளைய பாலயோகி கட்டையைப் போல் அமர்ந்திருக்கிறார். மிகவும் கூர்ந்து கவனித்தால் மட்டுமே, மூச்சு விடுவது லேசாகத் தெரிகிறது. அவர் கண்களைத் திறப்பதோ, சைகை காட்டிப் பேசுவதோ கிடையாதாம்!

அவரைப் பார்த்துக் கொண்டிருந்த போது. மறுபடியும் சிந்தனையோட்டம்... குழப்பம்... தலைச்சுற்றல்! இறுதியில் ஒரு பெரும் புதிர்! கண்ணுக்கும் அறிவுக்கும் எட்டாத மாசக்தியின் பேராட்சியைப் பற்றி பிரமித்து, வியந்து, பயந்து, பக்தியுணர்வோடு வெளியே வந்தோம்.

# சிவராத்திரி தரிசனம்

அந்த ஆண்டு சிவராத்திரி தினத்தன்று பால லோகியின் தரிசனத்திற்காக நாங்கள் மீண்டும் மும்முடி வரம் சென்றோம்.

அதிகாலையிலிருந்தே ஆந்திர மண்ணில் கரைபுரண் டோடிய பக்தி வெள்ளத்தில் மூழ்கித் திளைத்துக் கொண்டே நாங்கள் பயணம் செய்தோம். ஆந்திரப் பெண்டிர், விடியற்காலையிலேயே நீராடி விட்டு, புத்தாடை யுடுத்தி, மலர் சூடி, கையில் தேங்காய் பழங்களை ஏந்தி, சிவாலயங்களை நோக்கிக் கூட்டம் கூட்டமாகச் சென்ற காட்சியும், வழிநெடுகிலும் கோதாவரியில் லட்சக்கணக் கானவர்கள் நீராடிய காட்சியும் உள்ளத்தை சிலிர்க்க வைத்தன.

ஆலய வழிபாட்டிலும், பக்திப் பெருக்கிலும், புண்ணிய தினங்களைக் கொண்டாடுவதிலும் ஒவ்வொரு மாநிலமும் அடுத்த மாநிலத்தோடு போட்டியிட்டு, நம் பாரதத்தை ஆன்மீக உணர்வால் இணைக்கிறது. இந்த இணையிலா இணைப்பால் இறுகிய ஒருமைப்பாட்டு உணர்ச்சிதான் ஒருங் கிணைக்கும் ஜீவநாடியாகவும் ஒருவராலும் அழிக்க முடியாத மாபெரும் சக்தியாகவும் இருந்து நம்மை வாழ வைக்கிறது.

சூரியன் மேற்கில் மறைந்து, வையத்தில் இருளின் ஆட்சி தொடங்கிய வேளையில், நாங்கள் அமலாபுரத்தை நோக்கிச் சென்றுக் கொண்டிருந்தோம். இருபுறமும், ஒவ் வோர் இல்லத்தின் முற்புறத்தில் மூங்கில்களைக் கட்டி வைத்து, அவற்றில் அகல்விளக்குகளை வரிசையாக ஏற்றி வைத்திருந்தார்கள். வானில் பல்வேறு வண்ண மலர்கள் பூத்து குலுங்குவது போல், சின்னஞ்சிறு மின் விளக்குகள்

கண்ணைச் சிமிட்டி, நம் கருத்தைக் கவர்ந்தன. பக்திப் பாடல்களும், நாதஸ்வர இசையும் காற்றில் மிதந்து வந்தன. விடிய விடிய புராண நாடகங்களை நடித்துக் காட்டுவதற்காக ஆங்காங்கே அரங்குகள் எழும்பிக் கொண்டிருந்தன. இந்தக் கோலாகலத்தில் சின்னஞ்சிறுவர்கள் குதூகலத்துடன் கலந்து கொண்டு கும்மாளமிட்டுக் கொண்டிருந்தனர்.

நாங்கள் மும்முடிவரத்தை நெருங்கிய போது, கூட்டம் கூட்டமாக பாலயோகி ஆசிரமத்தை நோக்கி மக்கள் நடந்து கொண்டிருந்ததைக் கண்டோம். கார்கள் வரிசையாக அத் திசை நோக்கிப் பறந்துக் கொண்டிருந்தன. டூரிஸ்ட் பஸ்கள் தெருவை அடைத்துக் கொண்டு நின்றுக் கொண்டிருந்தன. மூலைக்கு மூலை போலீஸ் கெடுபிடி மும்முரமாக இருந்தது. யோக நிலையத்திற்கு எதிரே 'க்யூ' விற்காகப் போடப்பட்டிருந்த அடைப்புக்குள் தரிசனத்திற்கு வந்தவர்கள் அமர்ந்திருந்தார்கள்.

"நாளை விடியற்காலை நான்கு மணிக்குத்தானே தரிசனம். இவர்கள் இப்போதே வந்து உட்கார்ந்து விட்டார்களே" என்று அங்கிருந்த நண்பரிடம் நான் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"சார், இவர்கள் இப்போது வந்து உட்காரவில்லை காலை 11 மணியிலிருந்தே உட்கார்ந்திருக்கிறார்கள். முன் வரிசையில் அமர்ந்து பாலயோகியை முதலில் தரிசிக்க வேண்டும் என்று மக்கள் வெயிலையும், பனியையும், குளிரையும் பொருட்படுத்தாமல் உட்கார்ந்திருக்கிறார்கள்", என்று அவர் கூறியபோது என் ஆச்சரியம் பன்மடங்காயிற்று. நிமிஷத்திற்கு நிமிஷம் 'க்யூ' நீண்டுக்கொண்டு போயிற்று. அது வளைந்து, வளைந்து எங்கெங்கோ சென்றது. எதிரிலுள்ள மைதானமெங்கும் கூட்டம் நிரம்பி வழிந்தது.

ஆச்ரமத்திற்குப் பின்புறம் பலர் கூட்டம் கூட்டமாக நின்று கொண்டு, கமிட்டி மெம்பர் யாராவது கண்ணில் தென்படமாட்டார்களா என்று தேடிக் கொண்டிருந்தனர். கட்டடத்திற்குள் நுழைய வேண்டுமானால் கமிட்டி மெம்பரின் தயவு வேண்டும். அப்போது தான் 'உள் தரிசனம்' கிடைக்கும். கமிட்டி மெம்பர்கள் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் எத்தனை மணிக்கு, எங்கேயிருந்தால், எப்படி உள்ளே சௌகரியமாக நுழையலாம் என்று அவ்வப்போது ரகசியச் செய்திகளை அனுப்பி வைத்துக் கொண்டிருந்தனர்.

திடீரென்று கார்களும் ஜீப்புகளும் பறந்து வந்தன போலீஸ் அதிகாரிகள் 'சல்யூட்' அடித்தனர் ஆந்திர அரசு உயர் அதிகாரிகளும், போலீஸ் உயர் அதிகாரிகளும் குடும்பத்துடன் வந்து இறங்கினர் பின்னர் ஒரு பஸ், நாற்காலிகளையும், சோபாக்களையும் ஏற்றிக் கொண்டு வந்தது. காம்பவுண்டுக்குள் அடிக்கப்பட்டிருந்த கூடாரங்களுக்குள் சிப்பந்திகள் அவற்றைக் கொண்டு போய்ப் போட்டனர் அதிகாரம் கையில் இருக்கும் போது, குளிரிலும், பனியிலும் யாராவது அவதிப்படுவார்களா?

வெளியே ஓர் ஓரமாக நின்றிருந்த தமிழக அரசு டெபுடி செகரட்டரி திரு சண்முகசிகாமணி என்னருகில் வந்தார். இரத்தினகிரி ஆலயத்திற்கு முதன்முதலில் சென்ற போது அவர் எனக்கு அறிமுகமாயிருந்தார்.

அவருடன் சிறிது நேரம் பேசிவிட்டு கமிட்டித் தலைவர் திரு பாலசுந்தரத்தைக் காணச் சென்றேன்.

''இன்னிக்கு எத்தனை மணிக்கு பூட்டைத் திறக்கப் போகிறீர்கள்?'' என்று அவரிடம் கேட்டேன்.

"விடியற்காலை சரியாக மூன்று மணிக்குத் திறக்கப் போகிறோம். அநேகமாக உடனேயே தரிசனம் தொடங்கி விடும்" என்றார் அவர்.

"நீங்கள் பூட்டைத் திறந்தால் போதுமா? கதவு திறக்க நேரமானால் என்ன செய்வீர்கள்?"

"இன்று கதவு உடனேயே திறந்து விடும். டிசம்பர் மாத தரிசனத்தின் போது பாலயோகி மூன்று மணிக்கு பூட்டைத் திறக்கும் படி எங்களிடம் கூறி விட்டார். அதனால் நாங்கள் காத்திருக்க வேண்டிய அவசியம் இருக்காது என்று நம்புகிறோம்" என்று கூறினார்.

உள்ளே, கூட்டம் அதிகமாகிவிடும் என்று பதினொரு மணிக்கெல்லாம் எங்களைக்கட்டடத்திற்குள் அழைத்துச் சென்று உட்கார வைத்து விட்டார்கள். அந்தக்கூட்டத்தில் நிறையத் தமிழ் முகங்களைக் கண்டேன். முன்னாள் அமைச்சர் ஓ. வி. அளகேசன் அவர்களையும் தொழிலதிபர் என். மகாலிங்கம் அவர்களையும் அங்கு கண்டபோது மகிழ்ந்தே போனேன்.

"நீங்கள் விகடனில் எழுதியதைப் படிந்த பிறகு இங்கு வரவேண்டும் என்று தோன்றியது. புறப்பட்டு வந்து விட்டேன்" என்றார் அளகேசன்.

"பாலயோகி பற்றி நான் முன்பே கேள்விப்பட்டிருக் கேன். ஆனால், நீங்கள் எழுதியதைப் படித்தபிறகு தான் அவருடைய மகிமையெல்லாம் தெரிநதது. தரிசனம் செய்து விட்டுப் போகலாம் என்று வந்தேன்" என்றார் மகாலிங்கம்.

அவர்களுடன் வநதிருந்த நண்பர் பகீரதன், "நீங்கள் எழுதியதையெல்லாம் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், பாலயோகி ஏதோ சென்ட்ரிங் அடிக்காமல் காங்கரீட் போடச் சொன்னதைப் பற்றி அதிசயமாக எழுதியிருந்தீர்களே. அது ஒன்றும் பிரமாதம் இல்லை. நம் கிராமங்களிலெல்லாம்

பலகை வைத்து கட்டுவது வழக்கத்தில் இருந்து வருகிறது. பெங்களூரில் சென்டரிங் அடிக்காமல் காங்கரீட் தளம் போடுகிறார்கள்'' என்று கூறினார்.

‘‘இருக்கலாம். ஆனால், படிப்பு எழுத்தில்லாமல், மாடு மேய்த்துக் கொண்டிருந்த ஒரு சிறுவர், இந்த கிராமத்தை விட்டே வெளியே போகாத ஒருவர், இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு அறையில் போய்ப் புகுந்து கொண்டு தவத்தில் அமர்ந்திருப்பவர், இப்படியொரு யோசனையைக் கூறியது உங்களுக்கு ஆச்சரியத்தை அளிக்கவில்லையா?'' என்று கேட்டேன் நான். அவர் பதில் பேசவில்லை.

‘‘இருபத்தைந்து ஆண்டுகளாக, உண்ண ஆகாரமின்றி, ஐம்புலன்களையும் அடக்கிக் கடுந்தவம் இருப்பது அதிசயத்திலும் அதிசயமாயிருக்கிறது. இதைப் போல் நான் கேள்விப்பட்டதே இல்லை. வேறு யாராவது இப்படியிருக்கிறாரா?'' என்று கேட்டார் அளகேசன்.

‘‘எனக்குத் தெரிந்த வரையில் ஒருவரும் இல்லை. இவரது நிலை எளிதில் நம்ப முடியாத அளவுக்கு இருக்கிறது. அதில் சந்தேகமில்லை.’' என்றேன் நான்.

‘‘சார், நிஜமா இவர் சாப்பிடாமத்தான் இருக்காரா? இல்லை...'' என்று இழுத்தார் பகீரதன்.

‘‘தைரியமாகக் கேளுங்கள். இம்மாதிரி அதிசயங்களையும் அற்புதங்களையும் காணும் போது சந்தேகங்கள் தோன்றத்தான் செய்யும். தம் புத்தியை மட்டும் நம்பிக் கொண்டிருப்பவர்களுக்கு அதை மீறிய விஷயங்களில் அவநம்பிக்கை ஏற்படத்தான் செய்யும். நம் உள்ளம் ஆன்மீகப் பக்குவம் பெறப் பெற உண்மை நமக்கு விளங்கத் தொடங்கும்'' என்றேன் நான்.

ஆச்சரியத்தின் காரணமாக விளையும் இம்மாதிரி சந்தேகங்கள் அங்கு பலரிடம் இருப்பதைக் கண்டேன். உள்ளே அமர்ந்திருக்கும் பாலயோகி எவ்வாறு 'பால்கனி'க்கு வருகிறார் என்பதைப் பற்றியும் வேறு சில தோழர்களிடம் ஒரு சர்ச்சை எழுந்தது. ஆளுக்கொரு விதமாக அதைப் பற்றிப் பேசினார்கள். பாலயோகியை அப்படியே தூக்கிக் கொண்டு வந்து மேலே உக்கார வைப்பதாகக் கூட ஒருவர் சொன்னார்.

பால்கனிக்குக் கீழே ஒரு சுழற் படிக்கட்டு இருக்கிறது. அதன் வழியாக ஏறிச் சென்று தான் ஆண்டுக்கொரு முறை பால்கனியைச் சுத்தம் செய்து வைக்கிறார்கள். ஆனால், அந்த வழியாக பாலயோகி ஏறி வருவதை ஒருவரும் பார்த்ததில்லை என்கிறார்கள். அவர் எப்படி வருகிறார், எப்போது வந்து அமருகிறார் என்பது இதுவரை மர்மமாகவே யிருந்து வருகிறது.

நாங்கள் பேசிக்கொண்டே யிருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை. ஒரு மகானைப் பற்றிப் பேசிக் கொண்டு சிவராத்திரிக்குக் கண்விழித்த புண்ணியம் அன்று எல்லோருக்கும் கிட்டியது. மணி இரண்டே முக்கால். தலைவரும் இதர கமிட்டி மெம்பர்களும் வந்து, கமிட்டி அறையைத் திறந்து உள்ளே சென்றனர். சரியாக மூன்று மணிக்கு ஒரு மெம்பர் தேங்காயை உடைக்க, தலைவர் பூட்டைத் திறந்து, கதவை லேசாகத் தொட்டார். அது எளிதாகத் திறந்து கொண்டு விட்டது.

சற்றைக்கெல்லாம் வெளியே நின்றிருந்தவர்கள் உள்ளே அனுமதிக்கப் பட்டனர். டிசம்பரை விட இம்முறை கூட்டம் அதிகமாதலால் கூச்சலும் குழப்பமும் சற்று அதிகமாகவே இருந்தது. இம்முறை சற்றுத் தொலைவுலிருந்தே பாலயோகி

யைத் தரிசித்தேன். அவர் அப்படியே உட்கார்ந்திருந்தார். ஆனால், முன்பு பார்த்ததை விடச் சற்று இளைத்து வாடியிருப்பதாக எனக்குத் தோன்றியது.

வழக்கப்படி, பாலயோகி தரிசனத்திற்குப் பிறகு இளைய பாலயோகியை தரிசித்துவிட்டு வெளியே வந்தோம்,

மணி நான்கு இருக்கும். தவக்கனியைக் காண லட்சக் கணக்கில் அங்கு கூடியிருந்த மக்கள், வைத்த கண் வாங்காமல்'பால்கனி'யையேபார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆர்வமிக்க இளைஞர்கள் அங்கு மூன்று புறமும் அடைக்கப்பட்டிருந்த தட்டிகளை அகற்றி, இரும்புக் கதவுகளைத் திறந்தார்கள். கமிட்டி மெம்பர்கள் வந்து, மேல் துண்டினால் தூசியை எல்லாம் தட்டி விட்டார்கள். எந்த நிமிடமும் பாலயோகி தரிசனம் தர அங்கு வரலாம்!

அந்த 'பால்கனி'யின் மத்தியில் ஒருமேடையிருக்கிறது. அதைச் சுற்றிலும் மரப் பலகைக் கதவுகள் போடப்பட்டிருக்கின்றன. பாலயோகி அங்கு வந்து அமர்ந்ததும் அக்கதவுகள் திறக்கப்படுமாம். அதற்காகச் சில கமிட்டி மெம்பர்கள் சிறு துவாரம் வழியாக எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தனர்!

மணி நாலரை ஆகி விட்டது. முதல் நாள் காலையிலிருந்து காத்துக்கொண்டிருந்தவர்கள் பொறுமையை யிழக்கத் தொடங்கினர் கச முச சத்தம் அதிகமாயிற்று. பாலயோகி எப்போது வருவார்? கதவுகள் எபபோது திறக்கும்?

மணி ஐந்து. இன்னும் பாலயோகி வரவில்லை. காரணம் ஒருவருக்கும் புரியவில்லை "வழக்கமாக சரியாக நான்கு மணிக்கே வந்து விடுவாரே! ஒரு வேளை அவர் உள்ளே கமிட்டி மெம்பர்களுடன் பேசிக் கொண்டிருக்கிறாரோ?" கூட்டத்தில் பல குரல்கள். பல சந்தேகங்கள். பலப்பல கற்பனைகள்.

நல்லவேளை, ஒலிப்பெருக்கியில் ஓர் அறிவிப்பு வருகிறது. "இன்னும் அரைமணியில் பாலயோகி தரிசனம் தருவார்."

'பால்கனி'யில் பரபரப்பு குறைகிறது. கீழே சலசலப்பு சற்று அடங்குகிறது. அரைமணிக்கெல்லாம் கதவுகள் திறந்தன. அங்கு நாகாசனத்தில் பாலயோகி இளஞ்சூரியனைப் போல் காட்சி தந்தார். அத்தனை லட்சம் பேரும் சிவராத்திரி முழுவதும் கண் விழித்திருந்து, சிவஜோதி தரிசனம் பெற்றது போல் ஆனந்தப் பரவசத்தில் மூழ்கிப் போனார்கள். 'க்யூ' நகரத் தொடங்கியது. எல்லோரும் படியேறி வந்து, எட்டடித் தொலைவில் பாலயோகியை நன்றாகத் தரிசனம் செய்து விட்டு, கீழே யிறங்கி, இளைய பாலயோகியையும் தரிசித்து விட்டுத் திரும்பினார்கள்.

பின்னர், கமிட்டி மெம்பர் ஒருவருடன் பேசிக்கொண்டிருந்தேன். "நீங்கள் உள்ளேயே இருந்தீர்களே; பாலயோகி எப்படி மேலே வந்தார் என்று பார்த்தீர்களா?" என்று கேட்டேன்.

"நாங்க பார்க்க முடியாதுங்க.நாங்கள் வெளியே வந்து பழையபடி கதவைப் பூட்டிக் கொண்டு விடுவோம். அவர் எப்படியோ மேலே வந்து விடுவார். மேலே வந்ததும் நான் ரொம்ப அருகில் உட்கார்ந்து அவருடைய உள்ளங்காலைப் பார்த்தேன். அதுல ஒரு தூசி கூட இல்லை. ஒரு வருஷமா மூடியிருக்கிற அறையிலேயும், படிக்கட்டிலேயும் நூறு அடி நடந்து வந்தால் ஒரு துகள் கூடவா பாதத்தில் ஒட்டாமலிருக்கும்? அவர் நடந்து வருவதாக நான் நினைக்கலேங்க" என்றார் அவர்.

ஸ்ரீ பாலயோகியார் 1985 ம் ஆண்டு மகாசமாதியடைந்தார். அவர் பூட்டப்பட்ட அறைக்குள்ளேயே இருந்ததால் அவர் ஆவி பிரிந்த தினமோ, நேரமோ ஒருவருக்கும் தெரிய

வில்லை. அந்த ஆண்டு ஜுலைமாதம் 15ம் தேதிவாக்கில் அறைக்குள்ளிருந்து ஒரு வாடை வீசவே, கமிட்டியினர் வரவழைக்கப் பட்டனர். அவர்கள் 19ம் தேதிகாலை பூட்டைத் திறந்து, அறைக்குள் நுழைந்து பார்த்தபோது, யோகியின் திருமேனி படுத்த நிலையில் இருக்கக் கண்டனர். தலைக் கருகில் பகவத் கீதைப் புத்தகம் ஒன்று இருந்தது. அதன் மீது 'இதை ஒருவரும் தொடவேண்டாம்' என்று எழுதப்பட்டக் காகிதத் துண்டு ஒன்றும் காணப்பட்டது. 'உடலை யாரும் தீண்ட வேண்டாம்' என்று பாலயோகியார் தங்களுக்குக் கட்டளையிட்டுச் சென்றிருப்பதாக எண்ணிய கமிட்டியினர், அச்சடலத்தின் மீது சமாதிக் கட்டடம் ஒன்று எழுப்பி விட்டனர்.

அதன் பிறகு சிவராத்திரி தரிசனத்திற்கு வரும் கூட்டம், அந்த சமாதியை தரிசித்துவிட்டு, இன்றும் தவநிலையில் அமர்ந்திருக்கும் இளைய யோகியாரையும் தரிசனம் செய்து விட்டுத் திரும்புகின்றனர். பாலயோகியாரைப் போல இளையவர் பால்கனிக்கு வந்து தரிசனம் தருவதில்லை.

## திராட்சாராமம்

நல்லோரின் சேர்க்கை நிச்சயமாக நம்மை நல்வழிக்கு அழைத்துச் செல்லும். தவச் செம்மல்களைத் தரிசிக்கச் சென்றால், அப்புனிதப் பாதையில் ஆலய தரிசினம் கிடைக்கும்; நம் புராதனப் பெருமைகள் விளங்கும்; பாரதத்தின் தெய்வீக கலாச்சாரத்தின் மகிமைகள் கண் முன்னேகாட்சி தரும். உள்ளம் நிறையும். சித்தம் சுத்தமாகும்.

ஸ்ரீ பாலயோகியின் சிவராத்திரி தரிசனத்திற்காக மும்முடிவரம் சென்ற எங்களுக்கு எதிர்பாராத வகையில் சில

அபூர்வ ஆலயங்களைத் தரிசிக்கும் நல்வாய்ப்பு கிடைத்ததைக்கூறாமல் இருக்க முடியுமா?

கிழக்குக் கோதாவரியில் ராமச்சந்திரபுரம் தாலுக்காவில் உள்ளது திராட்சாராமம் என்ற திருத்தலம். அது காகிநாடாவிலிருந்து பதினெட்டு மைல் தொலைவில் இருக்கிறது. ராஜமகேந்திரபுரத்திலிருந்தும் காகிநாடாவிலிருந்தும் இங்கு செல்ல பஸ் வசதிகள இருக்கின்றன.

இத்தலத்தில், தட்சப் பிரஜாபதி யாகம் செய்ததாக நம்பப்படுகிறது. 'அராமம்' என்றால் நந்தவனம் என்று பொருள். தட்சனுடைய நந்தவனம் தாட்சாராமம் ஆகியிருக்கிறது, நாளடைவில் இது திராட்சாராமம் என்று மருவியிருக்கலாம்.

இங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பீமேச்வர சுவாமியைப் பற்றி பல கதைகள் கூறப்படுகிறது.

ஒரு பெரிய லிங்கம், ஐந்து பாகங்காளாக உடைந்து, சிதறி, ஐந்து தலங்களானதாக ஒரு புராண வரலாறு உண்டு அதில் திராட்சாராமம் முதன்மையானதாகக் கருதப்படுகிறது. இதர அராமங்கள், கிழக்குக் கோதாவரி மாவட்டத்தில் சாமல்கோட்டிலுள்ள குமாரராமா, மேற்குக்கோதாவரி மாவட்டத்தில் பால்கோட்டிலுள்ள க்ஷீரராமா, குனுபுடியிலுள்ள கோமராமா, குண்டூர் மாவட்டத்திலுள்ள அமரராமா ஆகியவையாகும். இந்த ஐந்து சிவலிங்கங்களையும் ஸ்ரீ ராமன் வழிபட்டதாகவும் சொல்லப்படுகிறது.

ஒன்றாக இருந்து பின்னர் ஐந்து பாகங்களாகப் பிரிந்த இந்தச் சிவலிங்கம், சூரிய பகவானால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்றும், இதை சப்த ரிஷிகள் வழிபட்டிருக்கிறார்கள என்றும் தல புராணம் கூறுகிறது. பீமேச்வர சுவாமிக்கு அபிஷேகம் செய்வதற்காக சப்த ரிஷிகள், சப்த

கோதாவரி நதிகளின் தீர்த்தத்தையும் இங்கு கொண்டு வந்தார்கள். எனவேதான், கோயிலுக்கு கிழக்குப் பகுதியிலுள்ள திருக்குளம் 'சப்த கோதாவரி புஷ்கரணி' என்று அழைக்கப் படுகிறது. குளக்கரையிலுள்ள மண்டபத்தில் சப்த ரிஷிகளின் சிற்பவடிவங்கள் காணப்படுகின்றன.

சுவாமிக்கு அபிஷேகம் செய்வதற்காக சப்த ரிஷிகள் ஏழு நதிகளையும் அழைத்து வரச் சென்றார்கள். வெள்ளம் அவ்வழியே வந்தால் தமது தவச் சாலை அழிந்து போய் விடுமே என்று அஞ்சிய துல்ய மகரிஷி அவர்களைத் தடுத்தார். அவர்களிடையே இதைப்பற்றிய வாக்குவாதம் வலுத்ததால், அபிஷேக நீர் வந்து சேருவதற்கு நேரமாகி விட்டது, அதற்குள் பொழுது விடிந்து விடவே, சூரியபகவானே பீமேச்வர சுவாமிக்கு அர்ச்சனை செய்து வழிபட்டாராம்.

திராட்சாராமம், தென்காசி என்றும் அழைக்கப்படுகிறது. வேத வியாசரே இங்கு பீமேச்வர சுவாமியைப் பிரதிஷ்டை செய்ததாகவும் கூறுகிறார்கள். 'இது யாராலும் பிரதிஷ்டை செய்யப்படவில்லை. சப்த கோதர்வரியில் சுயம்புவாகத் தோன்றியது. பின்னர் சப்த ரிஷிகளும், வியாசரும், சூரிய பகவானும், ஸ்ரீ ராமனும் வழிபட்டார்கள்' என்றும் ஒரு தல வரலாறு கூறுகிறது.

இவ்வாறு பலவிதமான புராணக் கதைகளால் சிறப்புற்றிருக்கும் ஸ்ரீ பீமேச்வர சுவாமி கோயிலுக்குள், தென்புறக் கோபுர வாயில் வழியாக நுழைகிறோம். எங்கு திரும்பினாலும் ஒரே திருவிழாக் கூட்டம். அன்று சிவராத்திரியாயிற்றே!

தென்பிராகாரத்தின்வலப்புறம் ஒரு தனிமண்டபம் இருக்கிறது. அதில் காசி விச்வேச்வரும், அன்னபூரணியும் எழுந்தருளியிருக்கிறார்கள். அம்பிகையை நோக்கியவாறு மேதா

தட்சிணாமூர்த்தி திருச்சந்நிதி கொண்டிருக்கிறார். அவர்களை வழிபட்டு விட்டு, வெளிப் பிராகாரத்தைச் சுற்றி வருகிறோம்.

அது மிகப் புராதனமானக் கோயில் என்று தற்போது வெளிப் பிராகாரம் இருக்கும் நிலையைக் கண்டாலே புரிகிறது! கோபுரங்கள், நமக்குச் சோழர் காலக் கோயில்களை நினைவு படுத்தினாலும், அவை கால வெள்ளத்தில் கரைந்து போயிருப்பதைக் காணும் போது கண்களில் நீர் பெருகுகிறது. ஏழு நிலைகள் கொண்ட மேற்குக் கோபுரம் நம்மை ஒரு கணம் நிற்க வைத்து, தன்னைப் பார்க்க வைக்கிறது!

வடக்குப் பிராகாரத்தில், கிழக்கு மூலையில் ஒரு கிணறு இருக்கிறது. அதைப் போன்ற அமைப்பை நான் இதுவரை வேறெங்கும் கண்டதில்லை. அது நீள வட்டமாக, 'ஓவல்' வடிவத்தில் அமைந்திருக்கிறது. ஆலயத்தில் மாணிக்காம்பாளாக எழுந்தருளியிருக்கும் தேவி, அக் கிணற்றில் தோன்றியதாக கூறினார் எங்களுக்கு வழி காட்டியாக வந்த அர்ச்சகர். அக்கிணற்றின் அருகில் கால பைரவர் சந்நிதியும், அஷ்ட பைரவ லிங்கங்களும் இருக்கின்றன.

கிழக்குப் பிராகாரத்தில் திருக்குளத்திற்கும், கொடிமரத்திற்கும் இடையே ஓர் அரச மரமும், வேப்ப மரமும் பின்னிக் கொண்டிருக்கின்றன. மரத் தடியில் ஒரு சிவலிங்கம் இருக்கிறது. அதன் மீது அரச மரத்தின் வேர் மறைத்தும் மறைக்காததுமாக மூடி யிருக்கிறது. அதனருகில் மகாவிஷ்ணு கை கூப்பியவாறு நின்று கொண்டிருக்கிறார். அது சங்கர நாராயண சுவாமி என்றும், தட்சனுடைய யாகத்திற்கு வந்த ஸ்ரீ மகாவிஷ்ணு, தமது சக்கராயுதத்தைத் தொலைத்து விட்டதாகவும் அதை மீண்டும் பெறுவதற்காகப் பரமசிவனைக் குறித்துப் பிரார்த்திப்பதா பதாகவும் அர்ச்சகர் ஒரு கதை சொன்னார்!

நாங்கள் சென்றபோது அச் சிவலிங்கத்திற்கு ஒரு பெண் மணி மஞ்சள் குங்குமம் இட்டு, பூஜை செய்து கொண்டிருந்தாள். மற்றொரு பெண்மணி எதிரில் இருக்கும் நந்தியின் இருகொம்புகளுக்கிடையே கண்ணைப் பொருத்தி அச் சிவலிங்கத்தைத் தரிசனம் செய்து கொண்டிருந்தாள். இங்கே இப்படி தரிசிப்பதுதான் விசேஷம் என்று அர்ச்சகர் கூறினார்.

மேடையின் மீது நாகப் பிரதிஷ்டைகள் செய்யப்பட்டிருக்கின்றன. அங்கு தத்தாத்ரேயரின் உருவச்சிலை ஒன்றும் காணப்படுகிறது. அடிப்பாகத்தில் புத்தர் போன்றும்; சமணத் துறவி போன்றும் இரு உருவச்சிலைகள் இருக்கின்றன. விசாரித்த போது, கோயிலில் எங்கோ இருந்த சிலைகளை அங்கு கொண்டு வைத்திருப்பதாகவும், அதற்கு வேறு ஒரு விசேஷமும் இல்லையென்றும் அர்ச்சகர் கூறினார். அந்த அரச மரத்தை ஒரு மண்டலம் சுற்றி வருபவர்களுக்கு மக்கட்பேறு உண்டாவது நிச்சயம் என்றும் அவர் கூறினார்.

அரச மரத்திற்கு மேற்கே, கொடிமரம் உயர்ந்து, கம்பீரமாக ஓங்கி நிற்கிறது. அதற்கு முன்னால், ஒரு பெரிய, அழகிய நந்தி வீற்றிருக்கிறது. அதன் முகம் நேரே நோக்காமல் ஒரு புறமாகத் திரும்பி யிருக்கிறது. ஆனால், அதன் இடக் கண் பீமேச்வர சுவாமியைக் காண்பது போல் அமைந்திருக்கிறது.

இப்போது உட் பிராகாரத்தை வலம் வந்து கொண்டிருக்கிறோம். சுற்றிலும் தாழ்வாரமும் மேல்மாடமும் இருக்கிறது. தென்புறம் விருபாட்ச லிங்கேச்வரர், ஸ்ரீ நடராஜர், சப்த மாதர்கள் எழுந்தருளியிருக்கிறார்கள். மேற்குப்புறம், சுப்பிரமணிய சுவாமி, துர்க்கையம்மன் சந்நிதிகள் இருக்கின்றன. அங்கு ஒரு சிறு கோயில் ஒற்றைக் கல்லில் வடித்து வைக

கப்பட்டிருக்கிறது. அது, பீமேச்வர சுவாமி கோயிலின் 'மாடல்'. அந்தக் காலத்தில், ஒரு கோயிலைக் கட்டும் முன்பு, அதைப் போலவே சிறிய அளவில் செய்து பார்க்கும் பழக்கம் இருந்திருப்பதாகவும், அப்படி செய்யப்பட்ட 'மாதிரி'க் கோயிலை அப்படியே அங்கு விட்டு வைத்து விட்டார்கள் என்றும் அர்ச்சகர் விளக்கம் கூறினார். வடப்புறத்தில் சண்டிகேச்வரர் இருக்கிறார். அதையடுத்து தெற்கு நோக்கி மாணிக்காம்பாளின் தனிச் சந்நிதியிருக்கிறது.

உட்பிராகாரத்தைச் சுற்றிவிட்டு கிழக்கு நுழைவாயில் வழியாகக் கருவறையைக் காணச் செல்லும் முன், வெளியே மண்டபத்தையொட்டி எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஆஞ்சநேய சுவாமியை வழிபடுகிறோம்.

அங்கு ஒருவர், அர்ச்சகரின் துணையோடு பூஜை செய்து கொண்டிருக்கிறார். பக்கத்தில் சகஸ்ரலிங்கம் இருக்கிறது. அடுத்து துர்க்கையம்மன் காட்சி தருகிறாள்.

கருவறையின் எதிரில் போய் நின்றதும் நாம் ஆச்சரியத்தில் மூழ்கிப் போகிறோம். அங்கு சிவலிங்கத்தை முழுமையாகப் பார்க்க முடியவில்லை. அது ஓங்கி வளர்ந்து, கூரையைப் பிய்த்துக் கொண்டு மேலே போயிருப்பதைக் கண்டு பிரமித்துப் போகிறோம். அது ஒரு ஸ்தூபியைப் போல் சுமார் பதினைந்து அடி உயரம் இருக்கிறது. கீழே நின்றால் அடிப் பாகத்தைத்தான் பார்க்க முடியும். மாடியேறிச் சென்றால்தான் அதன் உச்சியைக் காண முடியும். நான்கு புறமும் சுற்றி வந்து தரிசிப்பதற்குச் சௌகரியமாக மூன்று புறமும் ஜன்னல்கள் உள்ளன. கருவறையைச் சுற்றி இரண்டு பிராகாரங்கள் இருக்கின்றன.

படிகளேறி மேலே செல்கிறோம். மண்டபத்தில் நுழைந்ததும் அங்கிருந்தவர்களின் மெய்யான பக்தி யுணர்வு, சூழ்நிலையைத் தூய்மையாக்கி, நம்மையும் புனிதப்படுத்து

கிறது. தூண்களெல்லாம் சிற்பக் களஞ்சியங்களாகக் காட்சி தருகின்றன. தெய்வக் கலைஞர்கள், புராணக் கதைகளையெல்லாம் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்து படைக்கும் சிற்ப வடிவங்களாக வடித்துத் தந்திருக்கிறார் கள், அவற்றின் எல்லையற்ற எழிலில் உள்ளத்தைப் பறி கொடுத்து, ஆராய்கிறோம். ஒரு தூணில் நாலு அங்குல உயரத்தில் வியாச பகவான் நம் கண் நிரம்பக் காட்சி தருகிறார்.

கருவறையை நோக்கியபடி மண்டபத்தில் ஒரு புறம் விநாயகரும் மறுபுறம் சிவகாமசுந்தரி சமேத ஸ்ரீ நடராஜப் பெருமானும் எழுந்தருளியிருக்கிறார்கள்.

கருவறைக்குள் எட்டிப் பார்க்க விடாமல் அங்கு பக் தர்கள் நம்மை நெருக்குகிறார்கள். முண்டியடித்துக் கொண்டு பார்க்கிறோம். அங்கு பீமேச்வரரின் சிகரம் தெரிகிறது. கவசம் அணிவிக்கப்பட்ட சிவலிங்கத்திற்கு அர்ச்சகர்கள் அபிஷேகம் செய்து கொண்டிருக்கிறார்கள். இடப்புறம் பார்வதி தேவியின் உருவச்சிலையும் தெரிகிறது. கருவறையில் அம்மையும் அப்பனும் அருகருகே வீற்றிருக் கும் கிடைத்தற்கரிய கோலம் நம்மைப் பரவசத்தில் ஆழ்த்து கிறது.

மிகவும் ஆசாரத்துடன் இருப்பவர்கள் மட்டுமே உள்ளே அனுமதிக்கப்படுகிறார்கள். பெண்மணிகளைக் கருவறைக் குள் அனுமதிப்பதில்லை. அவர்கள் வெளியே நின்றே கும் பிடுகிறார்கள். கீழே இருப்பது போன்றே இங்கும் மூன்று புறமும் ஜன்னல்கள் இருக்கின்றன. வலம் வரும் போது, எல்லாக் கோணங்களிலிருந்தும் சுவாமியை நன்றாகத் தரிசிக்க முடிகிறது.

சிவராத்திரியன்று புராதன பெருமை மிக்க ஒரு கோயிலைத் தரிசித்த மன நிறைவோடு திராட்சாராமத் திலிருந்து புறப்பட்டோம்.

# கோட்டிப்பள்ளி

நம் நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் பாய்ந்தோடும் ஜீவநதிகள், பாரதத்தைப் புனிதத்தால் இணைத்து' அதை வளமாக்கி, நம் வாழ்வையும் செழுமைப்படுத்தி வருகின்றன. இறுதியில். அவை முப்புறமும் சூழ்த்துள்ள கடலில் கலந்து, ஆன்மிக அரண்களாக இருந்து நம்மை என்றென்றும் காத்து வருகின்றன. எனவேதான், நதிகளில் நீராடுவதும் கடலில் குளிப்பதும் பயனுள்ளதாகக் கருதப்படுகிறது. அதிலும் சில குறிப்பிட்ட இடங்களில் நீராடுவது மிக மிகப் புண்ணியமாகக் கூறப்படுகிறது. நதிகள் ஒன்று சேரும் இடமும், நதியும், கடலும் சங்கமம் ஆகும் இடமும் பிறப்பறுக்கும் தீர்த்தங்களாகும். அம்மாதிரிப் புண்ணிய தீர்த்தங்களுள் கோதாவரியின் ஏழு பிரிவுகளில் ஒன்றான கௌதமி, கடலில் கலக்கும் இடமான கோடிப்பள்ளியும் ஒன்றாகும்.

ஆந்திரர்கள் கோடிப்பள்ளியை **கோட்டிப்பள்ளி** என்று மிக அழுத்தமாக உச்சரிக்கிறார்கள். அந்த இடத்திற்கு 'கோடித்தீர்த்தம்' என்ற பெயரும், அங்கு சோமேச்வர சுவாமி கோயில் கொண்டிருப்பதால் அதற்கு சோம தீர்த்தம் என்ற மற்றொரு பெயரும் உண்டு.

கோடிப்பள்ளியில் அகலமான கோதாவரி தன்னைச் சுருக்கிக் கொண்டு, ஓர் ஓரமாக ஓடிக்கொண்டிருந்தாள். கடற்கரையைப் போல் ஆற்றுப்படுகை ஒரே மணற்பரப்பாக இருந்தது.

"வெள்ளம் வந்தால், இதோ இந்த அரசமர மேடை உயரத்திற்குத் தண்ணீர் நிரம்பி வழியும். அப்போது பார்க்க வேண்டும் இந்த இடத்தை" என்று கூறினார் உடன் வந்த நண்பர். கோதாவரியையும் கோடிப்பள்ளியையும்

நாங்கள் மிகச் சாதாரணமாக நினைத்து விடப் போகிறோமே என்ற கவலை அவருக்கு!

"நிறைய ஜனங்கள் குளிப்பார்கள் என்று கூறினீர்களே, கும்பலையே காணோமே" என்றேன் நான், அவர் உற்சாகத்தைக் குறைப்பதற்காக.

"நீங்கள் விடியற்காலையில் வந்திருக்க வேண்டும். லட்சக் கணக்கில் குளித்துக் கொண்டிருப்பார்கள். சூரியோதயத்திற்கு முன்னால் மகா சிவராத்திரி தினத்தன்று இங்கே ஸ்நானம் செய்யக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். எத்தனையோ புண்ணியம் என்று சொல்லுகிறார்கள்" என்றார் நண்பர்.

"சூரியன் உச்சியிலிருக்கும் போது இங்கு ஸ்நானம் பண்ணினாலும் அத்தனை புண்ணியமும் உண்டு" என்று கூறிவிட்டு, நாங்கள் நீரில் இறங்கி, மூழ்கி ஸ்நானம் செய்தோம்.

அந்த இடத்தில் நீர் உப்புக் கரித்தது. கடலன்னை உள்ளே வந்து, இருகரம் நீட்டி கோதாவரி மங்கையை ஆசையுடன் எதிர்கொண்டு அழைத்து, அணைத்துக் கொள்கிறாள்.

அருகில் படகுகளில் ஏறிப் பலர் அக்கரைக்குச் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தேன்.

"அவர்களெல்லாம் எங்கே போகிறார்கள்?" என்று நண்பரிடம் கேட்டேன் நான்.

"இங்கே யிருந்து நதியைக் கடந்து போனால் மும்முடிவரத்துக்கு நாலு மைல் தான். எல்லாரும் அங்கே தான் போறாங்க. அலமூரு பிரிட்ஜ் கட்டுவதற்கு முன்னே, இங்கேயிருந்துதான் படகிலே மும்முடிவரம் போகணும். இல்லேன்னா ராஜமந்திரிலேருந்து படகிலே பொப்பர் லங்கா

போய் அங்கே யிருந்து பஸ்லே போகணும்'' என்று விளக்கம் தந்தார் அவர்.

கோடிப்பள்ளியில் கோதாவரிக்கரையில் ஓர் அம்மன் கோயில் இருக்கிறது. அதைத் தரிசித்துக் கொண்டு சோமேச்வர சுவாமி கோயிலுக்குச் சென்றோம். செல்லும் வழியில் திருவிழாக் கூட்டம் நிரம்பி வழிந்தது. கோடித் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து விட்டு அத்தனை பேரும் அங்கு தரிசனத்திற்குச் செல்வார்களாம்.

புராணப் பெருமையும் புராதன மகிமையும் நிறைந்த மிகப் பழமையான ஆலயம் அது. அங்கு சோமேச்வர கிழக்கு நோக்கி திருச்சந்நிதி கொண்டிருக்கிறார். பார்வதி தேவி, ராஜராஜேச்வரியாகத் திருநாமம் கொண்டு எழுந்தருளியிருக்கிறாள். திருமால், சித்தேச்வர ஜனார்த்தனனாகத் திருக்கோயில் கொண்டிருக்கிறார்.

கோடித் தீர்த்தக் கரையின் மகிமையை உலக மக்களுக்கு உணர்த்தும் பொருட்டு ஸ்ரீமந் நாராயணனே அப்புண்ணிய தலத்திற்கு வந்து ஆழ்ந்த தவம் மேற்கொண்டார். அச்சமயம் பலிச் சக்கரவர்த்தி, இந்திரன் முதலான தேவர்களை வெற்றி கண்டு, மூன்று லோகங்களையும் ஆண்டு வந்தான். அப்போது, இந்திரன், அக்னி முதலான தேவர்கள் தவத்தில் ஆழ்ந்திருக்கும் திருமாலிடம் சென்று பலிச் சக்கரவர்த்தி செய்யும் யாகத்தை உடனே தடுத்து நிறுத்த வேண்டும் என்றும், அப்படிச் செய்யாவிட்டால் உலகில் தர்மமே அழிந்து விடும் என்றும் முறையிட்டார்கள். காச்யப மகரிஷியும் பரந்தாமனிடம் வந்து தேவர்களின் சார்பில் வேண்டிக் கொண்டார்.

மகாவிஷ்ணு வாமனனாக அவதாரம் செய்து, பலியிடம் மூன்று அடி மண் யாசித்து, இரண்டடிகளில் ஓங்கி உல

களந்து, மூன்றாவது அடியால், பலிச் சக்கரவர்த்தியையும் அழித்து, தேவர்களைக் காப்பாற்றினார். பின்னர், கோடித் தீர்த்தத்திற்கே திரும்பி வந்து, தமது தவத்தைத் தொடர்ந்தார்.

இந்த நிகழ்ச்சியின் நினைவாக காச்யப மகரிஷி, ஜனார்த்தனனுக்கு அங்கு திருக்கோயில் எழுப்பினார். அவர் எல்லா வரங்களையும் அளிக்கும் சித்தேச்வரராகப் புகழ் அடைந்தார். இந்தத் தலம் சித்தக்ஷேத்திரம் என்று அழைக்கப்பட்டது.

அகல்யையிடம் தகாத முறையில் நடந்து கொண்ட இந்திரனை கௌதம மகரிஷி சபித்த போது, இந்திரன் அவரது திருவடிகளில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். அப்போது மனமிரங்கிய மகரிஷி, அவனை கோடித்தீர்த்தக்கரைக்குச் சென்று தவமியற்றும்படியும் சித்தேச்வரரைக் குறித்துப் பிரார்த்திக்கும்படியும் கூறினார். அத்துடன், அங்கு சிவபெருமானுக்கு ஓர் ஆலயம் அமைக்கும்படியும் கட்டளையிட்டார். இந்திரன் பிரதிஷ்டை செய்ததுதான் கோடீச்வரர் என்று அழைக்கப்படும் சோமேச்வரசுவாமி. இந்த விவரங்களை பிரும்மா, நாரதருக்குக் கூறியதாகப் புராணத்தில் கூறப்பட்டுள்ளது கோடித் தீர்த்தத்திற்கு மூன்று நான்கு மைல் வரையில் உள்ள இடம் மிகவும் புண்ணியம் வாய்ந்ததாகவும், கோடிப் பள்ளியில் விஷ்ணு தீர்த்தம், பிரும்ம தீர்த்தம், மகேச்வரத் தீர்த்தம், ராம தீர்த்தம் முதலிய இடங்களில் எல்லா தெய்வங்களும் வந்து கூடுவதாகவும் பிரும்மா கூறுகிறார்.

இங்கு மற்றொரு ஸ்தல புராணமும் கூறப்படுகிறது. சுதாகரன் என்ற அரசன், தம் குரு பத்தினிக்குத் தீங்கு நினைத்ததால், கடும் நோயினால் பீடிக்கப் பட்டான்.

பின்னர், அந்த அரசன் தன் தவற்றுக்கு வருந்தி, பகவானிடம் தன்னைக் காப்பாற்றும் படிப் பிரார்த்தித்தான். அப்போது ஸ்ரீமந் நாராயணன், சுதாகரனைக் கோடித் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, கோடீச்வரரையும், சித்தேச்வரரையும் பிரார்த்திக்கும்படிக் கூறினார். சுதாகரனும் அவ்விதமே செய்து, உடல் நோய் நீங்கப்பெற்று, நலமாக வாழ்ந்தான்.

## 'ராலி' ஜகன்மோகினி

புண்ணியத் தலமாகவும் இயற்கையன்னை வாழும் எழிற்பூங்காவாகவும் விளங்கும் கோடிப்பள்ளியிலிருந்து ராவுலபாலம் வழியாக பொப்பர் லங்க்கா போகும் பாதையில் நான்கு மைல்கள் சென்றால் 'ராலி' என்ற சிற்றூர் இருக்கிறது. அங்கு ஜகன் மோகினி ஆலயம் ஒன்று இருப்பதை அறிந்து அங்கு சென்றோம்.

அக்கோயிலிலுள்ள மூல விக்கிரகத்தைப் பார்த்ததும், நாங்கள் அசந்தே போய் விட்டோம்.

ஸ்ரீ மகாவிஷ்ணு, மோகினியாக அவதாரம் எடுத்து வந்து, அமிர்தத்தைத் தேவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கிறார். சிவபெருமான் அம்மோகியினியின் சௌந்தர்யத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்து, அவளைப் பின் தொடருகிறார். அப்போது மோகினி சட்டென்று நின்று, திரும்பிப்பார்க்கிறாள். அத்தோற்றத்தைக் கண்ட பரமேச்வரனுக்குத்தூக்கி வாரிப் போடுகிறது. அவர் எதிரில் காட்சி தந்தது ஜகன் மோகினி அல்ல; சாட்சாத் நாராயணமூர்த்தி!

'ரயாலி' என்று அழைக்கப்படும் ராலியிலுள்ள ஜகன் மோகினி ஆலயமும், அதன் எதிரிலுள்ள ஸ்ரீ கமண்ட லேச்வரர் கோயிலும், இப்புராண நிகழ்ச்சிக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றன.

ஜகன்மோகினி ஆலயத்தின் கருவறையில் ஐந்தடி உயரமுள்ள கேசவப் பெருமாளைத் தரிசிக்கிறோம். அர்ச்சகர் அதன் பின் நம்மை வந்து பார்க்கும்படி அழைக்கவே சென்று பார்த்தோம். அங்கு ஜகன்மோகினியின் பின்னழகைக் கண்டு உள்ளம் பூரித்துப் போனோம்.

ஒரே உருவச் சிலை. முன்னால் பார்த்தால் கேசவப் பெருமாள், பின்புறம் பார்த்தால் ஜகன்மோகினி.

அது சாளக்கிராமச் சிலை. அதன் சிற்ப எழிலைப் போற்றுவதா, தெய்வீக வடிவத்தை வர்ணிப்பதா என்றே தெரியவில்லை. அதன் அற்புதத் தோற்றத்தை அணு அணுவாக ரசிப்பவர்கள் அது மனிதனால் வடிக்கப்பட்டது என்று நம்ப மறுப்பார்கள். வானுலக சிற்பியே அதை ஆக்கித் தந்ததாக நினைக்கத் தோன்றும். அடேயப்பா! எத்தனை நுணுக்கமான வேலைப்பாடுகள்! எத்தனை நளினமான நகாசு வேலைகள்! எத்தனை உருவங்கள்! எத்தனை புராணங்கள்! எத்தனை மகத்துவங்கள்! இந்தப் பிரபஞ்சத்தையே ஒரு சிலையில் அடக்கிக் காட்டி விட்டார்களே!

அர்ச்சகர் ஓர் உத்தரணியைக் கையில் எடுத்து, ஒவ்வோர் அங்கமாகக் காட்டி விளக்கும் அழகை இன்றைக்கெல்லாம் கேட்டு, ரசித்து மகிழலாமே!

கிரீடம், ஹஸ்தம், சங்கம், சக்கரம், கர்ண குண்டலம், மகர குண்டலம், கண்டமாலா, கௌஸ்தும் ஹாரம், யக்ஞோபவீதம், ஒட்டியாணம், பஞ்ச கச்சம்,

உத்தரீயம்....கையில் ரேகை, இந்தக் கையில் கதை, எல்லா விரல்களிலும் மோதிரங்கள்...பக்கத்தில் ஸ்ரீதேவி, பூதேவி, ருக்மிணி, சத்தியமாமா, இரு புறங்களிலும் பன்ன விருட்சம், ஸ்ரீ கிருஷ்ணன், தேவாலயம்...இதோ தசாவதாரக் காட்சிகள், தும்புரு, நாரதர், கிம்புருஷர்கள், ரம்பை, ஊர்வசி, சேஷசாயி, மகரிஷிகள்...அத்தனையும் சின்னஞ்சிறு வடிவங்கள்; சிந்தையைக் கவரும் சிற்பக் களஞ்சியம்.

பரந்தாமனின் திருவடிகளைக் கருடாழ்வார் நமஸ்கரித்துக்கொண்டிருக்கிறார். திருவடிகளுக்கிடையே அன்னை கங்கா தேவி அமர்ந்திருக்கிறாள். கூர்ந்து கவனிக்கிறோம். அங்கு நீர் கசிவது தெரிகிறது. அர்ச்சகர் புஷ்பங்களை எடுத்து, கங்கை நீரில் ஒற்றி நம்மீது தெளிக்கிறார்.

இங்கு இது மற்றோர் அற்புதம். ஜம்புகேச்வரத்தில் கருவறையில் எப்போதும் நீர் சுரப்பதுபோல் இங்கு கேசவப்பெருமாளின் திருவடிகளிலிருந்து நீர் கசிந்து கொண்டேயிருக்கிறது. அது எங்கிருந்து வருகிறது என்பது யாருக்குமே தெரியாத அதிசயம்.

அர்ச்சகர், சுவாமியின் பின்னழகை வர்ணிக்கிறார்:

பிச்சாடை, சாமந்திப்பூ, கையில் வங்கி, ரவிக்கையின் கச்சை, புடவைக்கச்சம், காலில் தண்டை, கொலுசு, தொடையில் மச்சம் ......

ஒரு கற்சிலையைப் பார்த்துக் கொண்டிருக்கிறோம் என்பதே மறந்து விடுகிறது. மோகினி அவதாரம் எடுத்த ஸ்ரீவைகுண்டவாசனின் அருகில் நிற்பதுபோன்ற உணர்வே ஏற்படுகிறது. எழுதி விளக்கமுடியாத காட்சி. கண்டு ஆனந்திக்க வேண்டிய திருக்கோலம்.

இத்தனை சிறப்புக்கள் கொண்ட உருவச்சிவைக்கு திருஷ்டி பட்டு விடப் போகிறது என்றோ என்னவோ,

சுவாமியின் மேல் இடக்கை பின்னமாயிருக்கிறது. அது பூஜைக்கு ஏற்றதுதானா என்ற ஐயம் தோன்றியது. ஆலய நிர்வாக அதிகாரி பத்ரய்யாவிடம் கேட்டேன்.

"இதைப் பற்றிய சர்ச்சை எழுந்தது. இந்தச் சிலையிலேயே சிறிய அளவில் கேசவசுவாமி ஆலயம் செதுக்கப்பட்டிருப்பதால், இது பூஜைக்குரியதுதான் என்று முடிவு செய்தார்கள்" என்று கூறினார் அவர்.

இது மிகவும் புராதனமான கோயில். 1926—ம் ஆண்டு தொடங்கி, பத்து ஆண்டுகள் இதை விரிவு படுத்தும் திருப்பணி நடந்து இருக்கிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன் புதுப்பிக்கப்பட்ட கோபுரமும் விமானங்களும் புது மெருகுடன் விளங்குகின்றன.

ஜகன்மோகினி கேசவசுவாமி ஆலயத்திற்கு நேர் எதிரே, அரைபர்லாங் தொலைவில் கமண்டலேச்வரர் சிவாலயம் இருக்கிறது. முன் மண்டபத்தில் இடப்பறம் ஸ்ரீவிநாயகர், ஸ்ரீதட்சினாமூர்த்தி, ஸ்ரீஐயப்பன், ஸ்ரீஆதி சங்கரர் முதலியவர்களின் உருவச் சிலைகள் இருக்கின்றன. எதிர்ப்புறத்தில் அர்த்தநாரீச்வரர் இருக்கிறார். பிராகாரங்களில் சுப்பிரமணியசுவாமியும், மகிஷாசுரமர்த்தனியும் கோயில் கொண்டிருக்கின்றனர்.

# பொன்னூர்

ரியாலியிலிருந்து புறப்பட்டு அன்றிரவு நாங்கள் விஜயவாடா வந்து சேர்ந்தோம். மறுநாள் சென்னைக்குத் திரும்பும் முன் இந்திர கீலாத்ரி மலையிலுள்ள ஸ்ரீ கனக துர்க்கையம்மனையும், ஸ்ரீ முருகன் ஆலயத்தையும் தரிசிக்க வேண்டும் என்று திட்டமிட்டிருந்தோம். ஆனால்திடீரென்று

காலையில் கருமேகங்கள் சூழ்ந்து, மழை பொழியத் தொடங்கி விட்டது. மழையில் கோயிலுக்குச் செல்ல முடிந்தாலும் போட்டோ எடுக்கமுடியாதே என்று எங்கள் எண்ணத்தை மாற்றிக் கொண்டோம். அங்கிருந்து தெனாலி வரையில் சென்று, நண்பரிடம் நலம் விசாரித்து விட்டு மாலை திரும்பி விடலாம் என்று புறப்பட்டோம். அங்கு மாஜிஸ்ட்ரேட்டாக இருக்கும் என் கல்லூரித் தோழர் நாகராஜனைச் சந்தித்து பல வருடங்கள் ஆகிவிட்டிருந்தன.

நாகராஜனோடு பேசிக் கொண்டிருந்தபோது, அருகில் ஏதாவது பார்க்க வேண்டிய கோயில்கள் இருக்கின்றனவா என்று கேட்டேன். பன்னிரண்டு மைல்களுக்குள் இருக்கும் பொன்னூர் என்ற ஊரில் ஒரு பெரிய ஆஞ்சநேயரின் சிலை இருப்பதாகவும் எல்லோரும் அவரைப் பற்றிப் பெருமையாகப் பேசுவதாகவும், ஆனல், தான் இன்னும் பார்க்கவில்லை என்றும் அவர் கூறினர்.

"அப்படியானல் வா, இப்போதே போய்ப் பார்த்து விட்டு வந்து விடுவோம்" என்றேன் நான்.

"உண்மையாகவா, இதோ ரெடி" என்று துள்ளிக் கொண்டு எழுந்தார் நண்பர். புறப்படுவதற்கு முன், "இந்த அம்மாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கியா?" என்று ஒரு படத்தைக் காட்டி என்னிடம் கேட்டார். பூர்ண சந்திரனைப் போன்ற முகப் பொலிவுடன் திகழும் ஒரு சுமங்கலியின் படம் அது. கருணையமுதம் பொழியும் அவரது கண்கள், தாயன்போடு நம்மைப் பாக்கின்றன. ஒரு கணம் அத்தோற்றத்தின் வசீகரத்தில் மூழ்கி நின்றேன்.

"இது யார்?" என்று கேட்டேன் நண்பரிடம்.

"அம்மா என்றே எல்லோரும் அழைக்கிறர்கள். பாபட்லாவுக்கு எட்டாவது மைலில், 'ஜில்லெலமுடி' என்ற

கிராமத்தில் இருக்கிறர். தினமும் நூற்றுக்கணக்கில் வந்து தரிசித்துக் கொண்டிருக்கிறர்கள். அங்கு போய் அவர் அருகில் அமர்ந்தால் மனச்சாந்தி ஏற்படுகிறது'' என்றார் நாகராஜன்.

''இன்று அம்மாவையும் நாம் தரிசித்து விடுவோம்'' என்றேன் நண்பரிடம். ''உண்மையாகவா?'' என்று மீண்டும் கேட்டவரின் உற்சாகம் கரைபுரண்டோடியது. அவர் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது.

பொன்னூருக்குள் நுழைந்ததும், உயர்ந்த கோபுரம் ஒன்று கண்ணுக்குத் தெரியவே, அக் கோயிலுக்கருகில் போய் எங்கள் கார் நின்றது. அது பாவநாராயண சுவாமி ஆலயம். மிகப் பழமையான ஹரிஹரத் தலம் அது. அங்கு காசி விச்வேச்வரருக்கும் திருச் சந்நிதியிருக்கிறது.

இரண்டாயிரம் வருடங்களுக்கு மூன் கேசவய்யா என்பவர் மழலைச் செல்வம் ஒன்று இல்லாமல் வருந்தினார். தம்முடைய சகோதரியின் மகனான கோவிந்தனை வளர்த்து வந்தார். அவன் ஒரு கூனன். பார்க்கப் பரம விகாரமாயிருப்பான். அவனை அழைத்துக் கொண்டு காசித் தலத்திற்குச் சென்றார் கேசவய்யா. காசி விச்வேச்வரரிடமும் பாவநாராயணரிடமும் தனக்கு ஒரு குழந்தை அருள வேண்டும் என்று மனமுருகிப் பிரார்த்தித்துக் கொண்டார் கேசவய்யா.

அப்போது கோவிந்தன் தன் மாமாவைப் பார்த்து 'மாமா, நான் சுவாமியைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன். உங்களுக்கு ஒரு பெண் பிறந்தால் எனக்குத் திருமணம் செய்து வைக்கிறீர்களா?'' என்று கேட்டான். எப்படியாவது குழந்தைச் செல்வம் கிடைந்தால் போதும் என்று ஏங்கிய கேசவய்யா சம்மதித்தார்.

விகார கோவிந்தன், பாவநாராயண சுவாமியைக் குறித்துப் பிரார்த்தித்துக் கொண்டான். ஆண்டவனின் அருளால் கேசவய்யா ஒரு பெண் குழந்தைக்குத் தந்தை யானார். அது தங்கப் பதுமை போன்று இருந்தது. அக்க லட்சுமி என்ற பெயருடன், அவள் அழகு மங்கையாக வளர்ந்தாள். அவளை விகார கோவிந்தனுக்கு மணம் முடிக்க அக்கையாவுக்கு மனம் வரவில்லை. கொடுத்த வாக்கை மறந்து, தன் மகளுக்கு வேறு வரன் தேட ஆரம் பித்தார். அதைக் கண்டு அவர் மருமகன் உள்ளம் வெதும் பினான்.

''மாமா, நீங்கள் கொடுத்த வாக்கை மீறலாமா? உங் கள் பெண்ணை எனக்கு மணம் முடிப்பதாகச் சொன்னீர் களே'' என்று அழாத குறையாகக் கேட்டான் கூனி கோவிந்தன்.

''அப்போது சொன்னேன். இந்த அழகுத் தேவதையை ஓர் அவலட்சணத்திற்கு கொடுப்பேனா?'' என்று கல் மனத்துடன் கேட்டார் கேசவய்யா.

''சுவாமியைச் சாட்சியாக வைத்துக் கொண்டு செய்த சத்தியத்தை மீறுவது மகாபாவம், மாமா.''

''அப்படியானால், உன் சுவாமியே வந்து சாட்சி சொல்லட்டும். உனக்கு என் பெண்ணைத் தருகிறேன்.''

உடனே காசிக்கு ஓடினான் கோவிந்தன். சாட்சி பாவநாராயணரிடம் கண்ணீருடன் முறையிட்டான். பக்த னின் மன வேதனையைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்தார் பரந்தாமன்.

''கோவிந்தா, திரும்பிப் பார்க்காமல் நடந்து போ. சாட்சி சொல்ல உன் பின்னாலேயே நான் வருகிறேன்'' என்று கூறினார். கோவிந்தன் மகிழ்ச்சியுடன் புறப்பட்

டான். சுவர்ணபுரி என்ற பொன்னூரின் எல்லையை அடைந்ததும், "சுவாமி வருகிறாரா இல்லையா?" என்ற சந்தேகத்தில் திரும்பிப் பார்த்தான். அப்போது அந்த இடத்திலேயே சுவாமி அர்ச்சாவதார மூர்த்தியாய் திருக் கோயில் கொண்டு விட்டார். உடன் வந்த காசி விச் வேச்வரரும் அருகிலேயே தங்கி விட்டார்.

அக் கோயிலுக்கும் தமிழகத்திற்கும் நிரம்ப சம்பந்தம் உண்டு. தாமிரவருணி ஆற்றங்கரையிலுள்ள ஓர் ஊரிலி ருந்து காசி யாத்திரை சென்று கொண்டிருந்த அனந் தாச்சாரி என்பவரின் கனவிலே தோன்றி, பொன்னூரி லேயே தங்கி, தன் கைங்கர்யத்தில் ஈடுபடும்படி பணித் தார் ஸ்ரீ நாராயணர். எனவே, அவர் அக் கோயிலின் முதல் பட்டரானார். பதினோராவது நூற்றாண்டில் ராஜ ராஜ மகேந்திரனின் புத்திரனான 'குலோத்துங்க சோழன் அங்கு மண்டபங்கள், பிராகாரங்கள், விமானங்கள் கட்டி, பல திருப்பணிகள் செய்திருக்கிறான்.

அக் கோயிலில் ராஜலட்சுமி தாயார், லட்சுமி நரசிம்ம சுவாமி சந்நிதிகள் இருக்கின்றன. கருடாழ்வாரும், ஆஞ்ச நேயரும் எழுந்தருளியிருக்கிறார்கள். ஈசானிய மூலையில் ஒரு கல்யாண மண்டபம் இருக்கிறது. அதில் கூனி கோவிந்துடுவின் கதையைக் கூறும் பதுமைகள் காணப் படுகின்றன.

பொன்னூரில், கன்னிகா பரமேச்வரி, கோதண்டராமர், வெங்கடேச்வரர், சகஸ்ரலிங்கேச்வரர் முதலிய கோயில்களும் இருக்கின்றன. இவற்றைத் தவிர பத்து ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட தசாவதாரக் கோயில் ஒன்றும் இருக் கிறது. ஒவ்வோர் அவதாரத்திற்கும் தனிச்சந்நிதியும் விமா னமும் இருக்கிறது. அங்கு விஷ்ணு பாதத்திற்கு அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன.

அக்கோயிலுக்கு அருகில், எதிரேயுள்ள பெரிய மண்டபங்களில் பிரமாண்ட அளவில் ஸ்ரீ வீர ஆஞ்சநேயரும், கருடாழ்வாரும் எழுந்தருளியிருக்கிறார்கள். ஏழு ஆண்டுகளுக்கு முன் கோடா ஜகந்நாதன் என்பவர் நன்கொடை வசூலித்து இவ்விரு உருவச் சிலைகளையும் செய்து வைத்திருக்கிறார். தமிழகத்தைச் சேர்ந்த பொன்னம்பல ஆசாரி என்ற ஸ்தபதிதான் இவற்றைச் செய்தார் என்று கூறினார்கள். எட்டுப்பாடி என்ற கிராமத்தின் அருகிலுள்ள மலைப் பாறையிலிருந்து ஸ்ரீ ஆஞ்சநேயரும், குல்லபாலம் என்ற இடத்திலிருக்கும் பாறையிலிருந்து ஸ்ரீ கருடாழ்வாரும் உருவாகி யிருக்கிறார்கள்.

அந்த ஆஞ்சநேயர் சிலை இருபத்தைந்து அடி உயரம் இருக்கும். பத்தடி அகலம். மூன்றடி கன. கவசம் சாத்துவதற்காகச் சுற்றிலும் சாரம் கட்டி வைத்திருந்ததால் அவருடைய கம்பீரத் தோற்றத்தை முழுமையாகப் பார்க்க முடியவில்லை. அலையும் மனக் குரங்கைக் கட்டிப் போட்டு அடக்கி விட்டால், மனிதன் எந்த அளவுக்கு உயரலாம் என்று காட்டுவதே போல் பூமிக்கும் வானத்திற்கும் ஓங்கி வளர்ந்து, விசுவரூபம் எடுத்து நிற்கிறார் ஸ்ரீ ஆஞ்சநேயமூர்த்தி.

ஒரு கையில் அமிருத கலசத்தை ஏந்தி நின்ற திருக்கோலத்தில், காலுக்கடியிலுள்ள நாகராஜனை அடக்குவது போல் அமைந்திருக்கும் ஸ்ரீ கருடாழ்வாரின் அதிசய தோற்றமும் நம்மைப் பிரமிக்க வைக்கிறது. அது ஸ்ரீ ஆஞ்சநேயரை விட உயரமான உருவச்சிலை. கருடாழ்வாரின் தோளில் மகாவிஷ்ணு அமர்ந்திருப்பது போல் உருவச்சிலை அமைந்திருந்ததென்றும், அங்கு எடுத்து வரும் போது அது உடைந்து விட்டது என்றும் அக்கோயிலில் பூஜை செய்து கொண்டிருப்பவர் வருத்தத்துடன் கூறியதைக் கேட்டபோது மனம் வேதனையுற்றது.

# ஜில்லெலமுடி அம்மா

குண்டூர் மாவட்டத்திலிருக்கும் பாபட்லாவிலிருந்து பெத்த நந்திப்பாடு என்ற ஊருக்குச்செல்லும் பஸ் பாதையில் நாங்கள் போய்க் கொண்டிருந்தோம். மணி மாலை நான்கு இருக்கும்.

அப்பாதையில் ஏழாவது மைலில் ஒரு சிறு பாதை பிரிந்தது. சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு அங்கு நின்றிருந்த ஓர் ஆசாமியிடம் "ஜில்லெலமுடிக்கு இப்படித்தான் போகவேண்டுமா?" என்று கேட்டோம்.

"அம்மாவைப் பார்க்கப் போகிறீர்களா? அதோ அந்த வெள்ளைக் கட்டிடத்தில்தான் இருக்கிறார். இப்படியே போங்கள்" என்றார் அவர், நாங்கள் அவ்வழியே சென்றோம். மேடும் பள்ளமும் கப்பி மண்ணுமாக இருந்த பாதையில் கார் செல்வது மிகவும் கடினமாக இருந்தது. மழைக் காலத்தில் அதில் பயணமே செய்ய முடியாது. எங்கள் கார் முக்கி முனகி, ஒன்றரை மைல் ஊர்ந்து சென்று, அந்த வெள்ளைக் கட்டடத்தினருகில் போய் நின்றது.

அது இரண்டு மாடிக் கட்டிடம். பெரிய ஹாஸ்டல் மாதிரி தோற்றமளித்தது. அங்கிருந்த ஒருவரை அணுகி "அம்மாவை இப்போது தரிசிக்க முடியுமா?" என்று கேட்டேன்.

"மாடி ஏறிப் போங்கள், அறையில் அம்மா தரிசனம் கொடுத்துக் கொண்டிருக்கிறார். நல்ல சமயத்தில்தான் வந்திருக்கிறீர்கள்" என்று எங்களை அவசரப்படுத்தினார் அவர். நாங்கள் படியேறிச் சென்றோம்.

அங்கு தாழ்வாரத்தில் கண் பார்வையற்ற சகோதரர் ஒருவர் ஏதோ சுலோகங்களைச் சொல்லி கொண்டிருந்தார்.

அவரைப் பார்க்க பரிதாபமாயிருந்தது. அவருடைய ஆர்வமும் பக்தியும் நெஞ்சை நெகிழச் செய்தன. அவருக்கு எதிரிலுள்ள அறையில்தான் 'அம்மா' இருக்கிறார் என்று புரிந்து கொண்டேன்.

அந்த அறைக்கு வெளியே ஒரு பெண்மணி அமர்ந்து கண் இமைக்காமல், பக்தியுணர்வோடு உள்ளே பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய பார்வை குத்திட்டு நின்ற திசையில்தான் அம்மா அமர்ந்து கொண்டிருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டேன்.

அவ்வறையை நோக்கி மெள்ளச் சென்றோம்.

வாயிற்படிக்கு வெளியே நின்று எட்டிப் பார்த்தோம். அங்கு ஒரு கட்டிலில் தங்கக் குத்து விளக்கை ஏற்றி வைத்தது போல் தெய்வீகப் பிரகாசத்துடன் வீற்றிருந்த அம்மா எங்களைப் பார்த்தார். அக் கணம் அன்பு மழை பொழிந்தது. கருணை வெள்ளம் கரைபுரண்டோடியது. உடலெல்லாம் நனைந்தது; உள்ளமெல்லாம் குளிர்ந்தது.

வாயிற்படிக் கருகில் அமர்ந்திருந்த பெண்மணி சட்டென்று எழுந்து, ''உள்ளே போங்கள்'' என்று மெல்லிய குரலில் எங்களிடம் கூறினார். நாங்கள் அடிமேல் வைத்து ஒவ்வொருவராக உள்ளே சென்றோம், 'அப்படியே உட்காருங்கள்' என்று அம்மாவின் காலடியில் அமர்ந்திருந்த ஒருவர் கூறவே, உட்கார்ந்தோம்.

அது சிறிய அறைதான். ஆண்களும் பெண்களுமாக அங்கு ஏழெட்டு பேர் அசையாமல் அமர்ந்திருந்தனர். சிறு தாடியுடன் காட்சியளித்த வெளிநாட்டுக்காரர் ஒருவர் சுவரில், சாய்ந்து கொண்டு கண்களை மூடியபடி தியானத்தில் அமர்ந்திருந்தார். அங்கு ஆழ்ந்த அமைதி நிலவியது.

நான் அம்மாவைப் பார்த்தேன். புருவங்களுக்கு மத்தியில் துலங்கிய பெரிய குங்குமப் பொட்டு சௌபாக்யத்தின் அறிகுறியாக, சகல மங்களங்களின் சின்னமாக என்னை முதலில் கவர்ந்தது. அவரது கண்களில் தேங்கி நின்ற கருணை, நம் கர்மவினைகளை யெல்லாம் அகற்றி விடும் ஆற்றல் பெற்றதாயிருந்தது உலகிலுள்ள சாந்தியெல்லாம் ஒரே இடத்தில் குடியேறி விட்டதோ என்று ஐயுறும் வண்ணம், அம்மாவின் திருவதனம் பொலிவு பெற்று விளங்கிற்று. பொற் குடத்திற்குத் தங்க நகை சூட்டினாற்போல், அம்மா அணிந்திருந்த ஆபரணங்கள் அழகுக்கு அழகு கூட்டின. அமைதியாக, எவ்விதச் சலனமுமின்றி அமர்ந்திருந்த அன்னையின் திருமுகத்தில் கருணையும் கனிவும், அன்பும் அழகும், ஆனந்தமும் சாந்தமும் இழையோடின. அவரிடம் நமக்குக் காரணம் கூறமுடியாத அந்நியோன்யம் ஏற்பட்டு விடுகிறது. நாமெல்லோரும் சிறுகுழந்தைகளாகி நம் அம்மாவையே அங்கு சந்திக்கிறோம்.

அம்மா தெரிந்து கொள்வதற்காக, ஒருவர் எங்களை யார் என்று விசாரிக்கிறார். நண்பர் நாகராஜன் என்னைப் பற்றி சுருக்கமாகத் தெலுங்கில் கூறுகிறார். அம்மா அச் செய்திகளை மிக அமைதியாகக் கேட்டுக் கொள்கிறார்.

எனக்கு அம்மாவின் கண்களைப் பார்க்கவேண்டும் போல் தோன்றியது பார்த்தேன். அம்மாவும் என்னைப் பார்த்தார். ஆயிரம் நிலவுகள் என் மீது அமுதம் பொழிந்ததுபோல் இருந்தது. ஒரு தாயைத் தவிர வேறு யாரால் அத்தனை அன்பைப் பொழிய முடியும்?

பண்டிதன் பாமரன், பணக்காரன் ஏழை, பெரியவர் சிறியவர், ஆண் பெண், மிருகம், பறவை, பூச்சி, புழு என்ற வேற்றுமை பாராமல் சகல ஜீவராசிகள்

மீதும் ஒரேவிதமான பரிவும் பாசமும் காட்டி, அன்பால் அரவணைக்கும் உலக மகா சக்திக்குப் பெயர்தானே அம்மா! அந்த மூன்றெழுத்து மாமந்திரத்தில் அடங்கியுள்ள தத்துவத்தைத்தானே அன்னை பராசக்தி, ஜகன்மாதா, அகிலாண்டகோடி பிரும்மாண்டநாயகி பறைசாற்றிக் கொண்டிருக்கிறாள்.

“அம்மாவிடம் ஏதாவது கேட்க வேண்டுமென்றால் கேளுங்கள்” என்றார் அங்கிருந்த பக்தர் ஒருவர்,

“நான் ஒன்றும் கேட்க வரவில்லை அம்மாவை தரிசிக்கத்தான் வந்தேன்” என்று கூறிவிட்டு, அம்மாவை மீண்டும் பார்த்தேன். குற்றால அருவியில் குளிக்கச் சென்றால் திரும்பி வர மனம் வருகிறதா?

அம்மா என்னையே பார்த்துக் கொண்டிருந்தார். அந்தப் பார்வையை நேருக்கு நேர் நோக்குவது சற்றுக் கடினமாகத்தான் இருந்தது. இருப்பினும் அந்த அருள் நோக்கிலிருந்து என் பார்வையை அகற்ற எனக்கு மனம் வரவில்லை.

அந்தச் சந்நிதியில் பேச்சுக்கே இடமில்லை, அன்பு சூழ்ந்துள்ள அந்த அறையில் அமர்ந்திருப்பதும், அன்பே உருவான அன்னையைப் பார்த்துக் கொண்டிருப்பதுமே பிறவிப் பயனை அடைந்து விட்ட அமைதியையும் ஆனந்தத்தையும் அளிக்கிறது.

திடீரென்று பேச வேண்டும் போலிருந்தது. பேசினேன்.

“அம்மா, நான் ஏற்றுக்கொண்டிருக்கும் ‘பக்திப்பயண’ பணிக்குத் தங்கள் அருளாசி வேண்டும். எனக்கு வேறென்றும் தேவையில்லை” என்றேன்.

அம்மாவின் உதடுகள் ஏதோ சொல்வதுபோல் லேசாக அசைந்தன. ஆனால், அவர் ஏதும் பேசவில்லை. கண்கள்

தான் பேசின. 'எனக்கு எல்லாம் தெரியும்' என்று கூறுவது போல் அவரது முகபாவம் மாறியது. என் உள்ளத்தில் நம்பிக்கை ஒளி வீசியது. புதுத் தென்பு பிறந்தது. திருவடிகளில் விழுந்து வணங்கினேன்

பின்னர், ஒவ்வொருவராக அழைத்துப் பிரசாதம் வழங்கினார் அம்மா. குங்குமப் பொட்டலங்களை கைநிறைய அள்ளித் தந்தார். ஆளுக்கொரு பழமும் தந்தார். விடை பெறும் முன் "போஜனம் செய்து விட்டுப் போங்கள்" என்று மிக மெல்லிய குரலில் தெலுங்கில் கூறினார்.

மணி அப்போது மாலை ஐந்தரை யிருக்கும்.

சாப்பிடும் நேரமா அது? மதிய உணவு சாப்பிட்டிருக்க மாட்டோம் என்ற எண்ணத்தில் எங்களை உணவருந்தச் சொல்கிறார் என்று நினைத்து, "நாங்கள் சாப்பிட்டாகி விட்டது" என்றேன் நான்.

அதைக் கேட்ட அம்மா, "போஜனம் செய்துவிட்டுப் போங்கள்" என்று மீண்டும் சைகை காட்டினார்.

நம் பசியறிந்து. வாய்க்கு ருசியாகச் செய்து போடுவதில் அம்மாவுக்குப் பிறகுதான் மற்றவர்கள். 'சாப்பிட்டாயா?' 'சாப்பிடுகிறாயா?' இன்னும் கொஞ்சம் போடட்டுமா? என்று பரிவுடன் விசாரித்து அன்பைக் குழைத்து ஊட்டும் தாயின் தன்னிகரற்ற பாசத்தை அன்று ஜில்லெலமுடி 'அம்மா'விடம் கண்டேன்.

வெளியில் நின்றிருந்த சகோதரி எங்களைச் சாப்பாட்டு அறைக்கு அழைத்துச் சென்றாள். அதற்குப் பெயர் அன்னபூர்ணாலயம். அம்மாவைத் தேடி வருபவர்கள் யாராயிருந்தாலும் எந்த நேரத்தில் வந்தாலும், எத்தனை பேர் வந்தாலும் சாப்பிடாமல் போகக் கூடாதாம். காலை ஆறு மணியிலிருந்து நடுநிசி வரை, அதற்குப் பிறகும்கூட,

அன்னமும், சாம்பாரும், பொறியலும், துவையலும் தயாரா யிருக்குமாம்.

அங்கு இருக்கும் சகோதரிகள் அத்தனை பேரும் அம்மா வுக்கு அன்புத்தொண்டு புரிகிறவர்கள் புக்ககத்திலிருக்கும் பெண்கள், பிறந்தகத்திலிருந்து வந்த தங்கள் உறவினர் களைக் கண்டு ஆனந்திருப்பது போல் அங்குள்ளவர்கள் அத்தனை ஆசையோடும், மகிழ்ச்சியோடும் நமக்கு உணவு படைக்கிறார்கள். அங்கு தன் 'குழந்தைகள்' வயிறார சாப்பிட்டால்தான் அம்மாவின் நெஞ்சு குளிருமாம்.

அங்கு காப்டன் தட்சிணாமூர்த்தி என்ற நம் ராணுவ வீரரை அறிமுகப் படுத்திக் கொண்டோம். அவர் குண் டூரைச் சேர்ந்தவர். ஜலந்தரில் பணியாற்றிக் கொண்டிருக் கிறார். 'அம்மா'வின் குழந்தைகளில் ஒருவரான அவர், அம்மாவுடன் இருப்பதற்காகப் பத்து நாட்கள் விடுமுறை எடுத்துக் கொண்டு வந்திருப்பதாகக் கூறினார்.

அந்த இல்லத்தை—அதை ஆசிரமம் என்று ஒருவரும் கூறுவதில்லை—சுற்றிக் காண்பித்தார் காப்டன். அதற்கு, 'அந்தரில்லம்' — அதாவது 'எல்லோருக்கும் பொதுவான வீடு' என்று பெயராம். விருப்பமுள்ளவர்கள் இரண்டு நாளோ, மூன்று நாளோ, ஒரு வாரமோ வந்து தங்கி விட்டுப் போகலாம். அம்மாவின் அருகில் அமர்ந்து, அவரது அன்பில் திளைத்து, மனச்சாந்தி பெற்றுத் திரும்பலாம்.

அங்கு தங்கியிருப்பவர்கள் காலை நான்கு மணிக்கு எழுந்து, சுப்ரபாதம் பாடி அம்மாவைத் துயிலெழுப்பு கிறார்கள். மாலையில் எல்லோரும் ஓரிடத்தில் கூடி சுலோகங்கள் சொல்லுவார்கள். அதற்குச் சந்தியா வந்தனம் என்று பெயர். விருப்பமுள்ளவர்கள் அம்மாவின் பாதங் களில் மலரிட்டு பூஜை செய்வார்கள்.

நாங்கள் சென்ற சமயம் அந்த இல்லத்தில் ஒரு சமஸ்கிருத பாடசாலை நடைபெற்று வந்தது. அங்கு சீக்கிரத்திலேயே ஒரு வேத பாடசாலையும், ஓரியண்டல் கல்லூரியும் தொடங்க வேண்டும் என்பது அம்மாவின் விருப்பம். அதற்கான நன்கொடைகள் பெருமளவில் சேர்ந்து, அம்மாவின் கனவு நனவாகும் நாள் வெகு தொலைவில் இல்லை என்று கூறினார் காப்டன் தட்சிணாமூர்த்தி.

''அம்மாவுக்கு இப்போது என்ன வயது ஆகிறது?''

''இந்த மார்ச் மாதம் இருபத்தைந்தாம் தேதி (1972) சுத்த ஏகாதசியன்று அம்மாவுக்கு ஐம்பதாவது வயது தொடங்குகிறது.''

பேசிக் கொண்டே அருகிலிருக்கும் ஒரு குடிலுக்கு வந்தோம்.

''அம்மா முதலில் வசித்து வந்த வீடு இதுதான்'' என்றார் காப்டன்.

உள்ளே நுழைந்தோம். அங்கு அட்டையினாலான ஒரு பெண்ணின் உருவம் காணப்பட்டது. அதற்குப் புதுப் பட்டுப் புடவையை உடுத்தி, நகைகள் அணிவித்து அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. முகம் மட்டும் போட்டோ.

''இது யார்?'' என்று கேட்டேன் நான் காப்டனிடம்.

''இது அம்மாவின் பெண் ஹைமாவின் உருவம். நான்கு ஆண்டுகளுக்கு முன் தனது இருபத்தைந்தாவது வயதில் இவள் இறந்து விட்டாள். அதற்குப் பிறகுதான் அம்மா இந்த இடத்தை விட்டுப் புதிய கட்டடத்திற்குச் சென்றார்'' என்றார் தட்சிணாமூர்த்தி.

''அம்மாவுக்கு ஒரே பெண்தானா?''

''ஒரே பெண்தான். இரண்டு பிள்ளைகள் இருக்கிறார்கள், ஹைமாவுக்குத் திடீரென்று ஒரு நாள் உடம்பு

சீரியஸாகி விட்டது. இறந்து விட்டாள். பெண்ணை ஆஸ்புத்திரிக்கு அழைத்துக் கொண்டு போக வேண்டாம் என்று ான் அம்மா சொன்னார். இங்கிருப்பவர்கள் கேட்கவில்லை. மிகவும் மோசமான நிலையில் கொண்டு போய் குண்டூர் ஆஸ்பத்திரியில் 'அட்மிட்' செய்தார்கள். ஆனால், டாக்டர்களால் அவளைப் பிழைக்க வைக்க முடியவில்லை.''

''அம்மா, பெண்மீது ரொம்பப் பாசம் வைத்திருந்தாரோ?''

''அம்மாவுக்கு எல்லோரும் ஒன்றுதான் எங்களிடம் இருப்பது போல்தான் பெண்ணிடமும் அன்பு காட்டினார். ஹைமாவும் இங்கிருப்பவர்களைப் போல்தான் அம்மாவுக்குத் தொண்டு புரிந்து வந்தாள்.''

''தம் பெண் இள வயதில் இறந்து விடுவாள் என்று அம்மா ஜாடைமாடையாக எப்போதாவது கூறியிருக்கிறாரா?'' என்று கேட்டேன் நான்.

காப்டன் சற்று சிந்தித்தார். ''நீங்கள் கூறுவது சரி ஹைமாவிடம் இருபத்தைந்தாவது வயதில் உன் வாழ்க்கையில் பெரிய மாறுதல் ஏற்படப் போகிறது' என்று அம்மா அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பாராம். அவளுடைய மறைவுக்குப் பிறகுதான் எல்லோருக்கும் அதன் பொருள் புரிந்தது'' என்று கூறினார் கேப்டன்.

அந்தக் குடில் அடுத்தாற்போல் ஒரு மந்திர் இருக்கிறது. ''அது என்ன?'' என்று கேட்டேன்.

''வாருங்கள். பார்க்கலாம். அது ஹைமாலயம், ஹைமாவின் சமாதி அங்குதான் இருக்கிறது'' என்று எங்களை அழைத்துச் சென்றார் காப்டன்.

அந்த சமாதியின் மீது சலவைக் கல்லில் ஹைமாவின் உருவச் சிலை வைக்கப்பட்டிருக்கிறது. கீழே சிறிய சிவ லிங்கம் ஒன்று இருக்கிறது. அங்கு பயபக்தியுடன் இரண்டு பெண்மணிகள் ஏதோ நாமாவளி சொல்லி, அர்ச்சனை செய்து கொண்டிருந்தனர்.

ஹைமாலயத்தை அடுத்து ஒரு மண்டமம் எழும்பிக் கொண்டிருக்கிறது. ''அது என்ன ஆலயம்'' என்று விசாரித்தேன்.

''அம்மா கட்டச் சொன்னார்கள். கட்டிக் கொண்டிருக்கிறார்கள். அது எதற்கு என்பது அம்மாவுக்கு மட்டுமே வெளிச்சம்'' என்று கூறிவிட்டு, புன்னகை புரிந்தா காப்டன்.

அவருக்கு முதன் முதலில் அம்மாவிடம் எப்படி பக்தியும் நம்பிக்கையும் ஏற்பட்டது என்று காப்டனிடம் விசாரித்தேன். அம்மாவின் ஆசியால் எதிர்பாராத வகையில் தமக்குத் திருமணம் நடந்த நிகழ்ச்சியை அவர் கூறியது ஒரு பானை சோற்றுக்கு ஒரு பருக்கை பதமாக அமைந்திருந்தது.

நான்கு ஆண்டுகளுக்கு முன், நண்பர் ஒருவரின் தூண்டுதலின் பேரில் தட்சிணாமூர்த்தி, அம்மாவைத் தரிசிக்க ஜில்லெலமுடிக்கு வந்தார். அறையில் வந்து அமர்ந்தவர் அரை மணிக்கெல்லாம் விடைபெற்றுச் சென்றார். அந்த அறையில் யார் யார் இருந்தார்கள் என்று அப்போது அவர் கவனிக்கவில்லை.

அவர் வெளியே சென்றதும், அம்மா தமக்கு அன்புத் தொண்டு புரிந்து கொண்டிருந்த அன்னபூரணி என்ற மங்கையை அருகில் அழைத்து, ''இப்போது வந்து போனானே அந்தப் பையனைப் பார்த்தாயா?'' என்று கேட்டார்.

"பார்த்தேம்மா" என்று நாணத்துடன் கூறினாள் அன்னபூரணி.

"இந்தப் பையன்தான் உனக்குக் கணவனாகப் போகிறான். நீ திருமணம் செய்து கொண்டால் இவனைத்தான் செய்து கொள்வாய். இல்லாவிட்டால் நீ கன்னியாகவே காலத்தைக் கழிக்க வேண்டியிருக்கும்" என்றார் அம்மா.

திருமணமாகாத ஒவ்வோர் இள மங்கையும் தனக்கு வரப்போகும் கணவன் எப்படிப் பட்டவனாக இருக்க வேண்டும் என்று இன்பக் கனவு காண்பாள். அதைப் போலவே ஒவ்வோர் இளைஞனும் தன் வருங்கால மனைவி எப்படி இருக்க வேண்டும் என்று தன் மனத்தில் ஓர் உருவத்தை நீட்டி வைத்திருப்பான். இது இயற்கை.

காப்டன் தட்சிணாமூர்த்தி மட்டும் எப்படி இதற்கு விதிவிலக்காக இருக்க முடியும்? ஒரு ராணுவ வீரரின் மனைவி எந்த லட்சணங்கள் எல்லாம் பொருந்தியவளாக இருக்க வேண்டும் என்று ஏற்கனவே தீர்மானித்து வைத்திருந்தார். ராணுவத்தில் தன்னுடன் பணியாற்றும் சிலரது மனைவியரைப் பார்த்திருக்கிறார் அவர். அத்தகைய பேரழகும் நான்கு பேருடன் கூச்சமின்றிப் பழகும் நாகரீகப் பண்புகளும் நிறைந்தவளையே கரம் பற்ற வேண்டும் என்று எண்ணியிருந்தார். தன் வாழ்க்கைத் துணைவியைத் தேர்ந்தெடுக்கும் தன் உரிமையைத் தன் பெற்றோருக்கோ உறவினருக்கோ விட்டுக் கொடுக்கச் சிறிதும் தயாரில்லை அவர்.

திருமணம் குறித்து இத்தகைய முற்போக்குக் கருத்துக்களைக் கொண்டிருந்த காப்டனிடம் அவரது வீட்டார், 'ஜில்லெலமுடி அம்மா அன்னபூர்ணா' என்ற பெண்தான் உனது மனைவியாகப் போகிறாள்' என்று கூறியிருக்கிறார்

என்று தெரிவித்த போது, அவர் திடுக்கிட்டுப் போனார். அவர்கள் தந்த விவரங்களிலிருந்து, அந்தப் பெண் அழகிலோ, படிப்பிலோ, பழக்க வழக்கங்களிலோ தன் கற்பனைப் பெண்ணுக்கு சிறிதும் சம்மந்தமில்லாதவள் என்று அறிந்து கொண்டார். ஒரு கட்டுப் பெட்டியை அதிலும் முன் பின் பார்த்தறியாத ஒரு பெண்ணை யாரோ சொன்னார் என்பதற்காக தான் மணக்க முடியாது என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார். அதற்குப் பிறகு ஜில்லெலமுடிக்கு போகவும் மறுத்து விட்டார். அங்கு சென்றால், அம்மா எப்படியாவது தன்னை வற்புறுத்தி அந்தப் பெண்ணைத் தன் தலையில் கட்டி விடப் போகிறாரே என்ற அச்சம் அவருக்கு.

அப்போது அகமத்நகரில் இருந்த காப்டன் தட்சிணாமூர்த்தியின் இதயத்தில் அம்மா புகுந்து, சில அனுபவங்களை ஏற்படுத்தித் தந்து, திருமணத்தைப் பற்றிய தனது எண்ணங்களைச் சிறுக சிறுக மாற்றிய அதிசயத்தைப் பற்றிப் பூரிப்போடு நினைவு கூர்ந்தார் காப்டன்.

அவரது நண்பர் ஒருவர் கட்டழகியொருத்தியை மணம் புரிந்து கொண்டிருந்தார். இதர ராணுவ வீரர்கள் அவரைக் கண்டு பொறாமைப் பட்டார்கள். பார்ட்டிகளில் அந்த மங்கை அத்தனை பேர் கவனத்தையும் கவர்ந்தாள். ஆனால், திருமணம் ஆன புதிதில் சொர்க்கலோகத்தில் இருந்ததாகக் கருதிய அந்த ராணுவ வீரர், படிப்படியாக மன அமைதியை இழந்தார். எந்த மனைவி தன் வாழ்க்கையை பசுஞ்சோலையாக மாற்றுவாள் என்று நினைத்திருந்தாரோ, அவளே அதைப் பாலைவனமாக்கியதைக் கண்டு அவர் உள்ளம் குமைந்தார் நிம்மதியற்று, நிலை குலைந்து போன நண்பரை காப்டன் தட்சிணாமூர்த்தி கண்டார். அவரது வாழ்க்கையைந் தனக்கு ஒரு படிப்பினையாகக் கருதினார்.

குழம்பிய மனதோடு இருந்தவரைத் தெளிய வைத்தது அவர் பார்த்த ஓர் ஆங்கிலத் திரைப்படம். அதன் கதாநாயகன் ஒரு ராணுவ அதிகாரி. அவன் எழில் மங்கையொருத்தியை மணம் புரிந்து கொள்கிறான். அதனால் வாழ்க்கையில் பல இன்னல்களை அனுபவிக்கிறான். அந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த தட்சிணாமூர்த்தி, தன்னையே அந்த கதாநாயகனாக ஒரு கணம் கற்பனை செய்து கொண்டார். அவன் பட்ட துன்பங்களெல்லாம் தனக்கும் பொருந்துவதாக உணர்ந்தார் அவர். கொட்டகையை விட்டு வெளியே வந்தபோது அவர் முற்றிலும் புதிய மனிதராகவே மாறிவிட்டிருந்தார். தன் எதிர்கால மனைவியைப் பற்றி அவர் கட்டியிருந்த மனக் கோட்டைச் சரிந்து, தவிடு பொடியாகி மண்ணோடு மண்ணாகியதைக் கண்டார். அதில் அவருக்கு வருத்தமே இல்லை, மாறாக, அளவற்ற மகிழ்ச்சி. தன் மனத்தை விட்டு பெரிய பளு ஒன்று இறங்கி விட்டதாகப் பெருமூச்சு விட்டார்.

திருமணத்தைப் பற்றிய தமது 'உரிமைகளை' முழுமையாக விட்டுக் கொடுத்தார் காப்டன். ஜில்லெலமுடி அம்மாவிடம் சரணடைந்தரர். அம்மா சொன்ன பெண்ணையே மணக்கத் தயாரா யிருப்பதாக தம் உறவினர்களிடம் கூறினார். அதற்குப் பிறகு எல்லாம் மின்னல் வேகத்தில் நடைபெற்றன. 1969-ம் ஆண்டில் காப்டன் தட்சிணாமூர்த்திக்கும் அம்மாவுக்கு அன்புத் தொண்டு புரிந்து வந்த அன்னபூர்ணாவுக்கும் ஜில்லெலமுடி அன்பு இல்லத்தில், அம்மாவின் நல்லாசியோடு திருமணம் இனிதே நடந்தேறியது.

அம்மாவின் தெய்வீகத் தன்மைக்கு தனது மனமாற்றத்தையும் எதிர்பாராத திருமணத்தையும் உதாரணங்களாகக் கூறினார் காப்டன். அவரது மகிமையை விளக்க இன்னும் நிகழ்ச்சிகளை அடுக்கிக் கொண்டே போகலாம்

என்றும், அம்மாவிடம் வருபவர்கள் அத்தனை பேரும் தங் சொந்த அனுபவங்களின் மூலம் அவரை உலகத் தாயாக வும், பால திரிபுரசுந்தரியாகவும், ராஜராஜேச்வரியாகவும் உணருகிறார்கள் என்றும் உணர்ச்சிப் பொங்கக் கூறினார் காப்டன்.

"அம்மா ஏதாவது பூஜை செய்கிறாரா?" என்று கேட் டேன் நான்.

"எனக்குத் தெரிந்தவரை ஒன்றும் கிடையாது. அவ ருக்குத்தான் எல்லோரும் பூஜை செய்கிறார்கள். ஆனால், அம்மா தன்னைக் கடவுள் என்றோ, தேவி என்றோ சொல் லிக் கொள்வது கிடையாது. நம்மை பிரமிக்க வைப்பதற் காக விக்ரகங்களை வரவழைப்பது, விபூதிக் குங்குமம் வர வழைத்துக் கொடுப்பது போன்ற அற்புதங்களை நிகழ்த்திக் காட்டுவதில்லை. அன்பின் உருவாக, கருணைத் தாயாக அமர்ந்திருக்கிறார் அவர். அவ்வளவுதான்" என்று கூறிய தட்சிணாமூர்த்தி, "உங்களுக்கு ஒரு ரகசியம் கூறுகிறேன். இத்தனை பேருக்கு வயிறார சாப்பாடு போடும் அம்மா உணவு அருந்துவதில்லை. கொஞ்சம் பார்லி நீரும், காப்பி யும்தான் அருந்துகிறார். அன்பர்கள் ஏதாவது கொடுத்தால் ஒரு துளி எடுத்து வாயில் போட்டுக் கொள்வார். அதுவும் எப்போதாவதுதான். அவர்களுடைய திருப்திக்காகத்தான்" என்றார்.

அம்மாவைப் பற்றி கேட்க கேட்க, படிக்கப் படிக்க அவர் ஓர் அதிசயப் பிறவி என்ற எண்ணமே மேலோங்கு கிறது. அவர் பிறந்த வேளையும், வளர்ந்த விதமும் அசாதாரணமாகவே இருக்கின்றன.

ஸ்ரீண்டுரைச் சேர்ந்த மன்னவா என்ற குக்கிராமத்தின் அதிகாரிகளில் ஒருவர் சீதாபதி. அவரது மனைவியாரின் பெயர் ரங்கம்மா. இருவருக்கும் அடுத்து அடுத்து ஐந்து குழந்தைகள் பிறந்து, இறந்து விட்டன. ஆறாவதாக ஓர் ஆண் குழந்தை பிறந்தது; அக்குழந்தையாவது பிழைக்க வேண்டுமே என்று இருவரும் அவ்வூர் சென்னகேசவப் பெருமாளையும் லட்சுமி தேவியையும் பிரார்த்தித்துக் கொண்டிருந்தனர். அந்தக் குழந்தை வளர்ந்து கொண்டிருந்தது.

ஒரு நாள் சீதாபதி தன் குழந்தைகளுக்கு நேர்ந்த கதியை நினைத்து வருந்தியபடி ஒரு புளிய மரத்தடியில் அமர்ந்திருந்தார். அப்போது அவருக்கு முன் ஓர் ஐந்து வயது சிறுமி தோற்றம் அளித்தாள். சற்றைக்கெல்லாம், அவள் உருமாறி சென்னகேசவப் பெருமாளாகவும் லட்சுமி தேவியாகவும் தரிசனம் தந்தாள். கணப்பொழுதில் அவர்கள் மறைந்து, மீண்டும் அச் சிறுமியே எதிரில் நின்றாள்.

இந்த மாயத் தோற்றத்திற்குப் பிறகு, ஒரு நாள் சீதாபதி ஒரு கனவு கண்டார். தன் வீடு காலியாக இருந்தது. முற்றத்தில் நடுத்தர வயதும், பேரழகும் கொண்ட பெண் மணியொருத்தி நாற்காலியில் அமர்ந்திருந்தாள். அவளது இரு புருவங்களுக்கிடையில் பெரிய குங்குமப் பொட்டுத் துலங்கியது.

"நீ யாரம்மா" என்று கேட்டார் சீதாபதி.

"நான் அம்மா" என்று சட்டென்று பதில் வந்தது.

"யாருடைய அம்மா?" என்று கேட்டார் சீதாபதி.

"நான் எல்லோருக்கும் தாய்" என்றாள் அந்தப் பெண்மணி.

சீதாபதி புளிய மரத்தடியில் கண்ட தெய்வீகத் தோற்றத்தையும், அவர் கனவில் கண்ட தெய்வீகக் காட்சியை

யும் கேள்வியுற்ற பண்டிதர்கள், அத்தம்பதிக்கு ஒரு தெய் வீகக் குழந்தை பிறக்கப் போகிறது என்று கூறினார்கள். அதன்படியே சில மாதங்களுக்கெல்லாம் ரங்கம்மா கருவுற் றாள். தன்னுள் அக் கரு வளர்ந்தபோது, பல தெய்வீகக் காட்சிகளைக் கண்டாள். அதுவரை கண்டறியா பேரானந் தத்தில் எந்நேரமும் லயித்திருந்தாள். பேரண்டத்தையே தன் வயிற்றில் தாங்கியிருப்பதாக ஓர் அபூர்வ உணர்வு அவளை ஆட்கொண்டது. திடீரென்று வாய்விட்டுச் சிரிப் பாள். ஆனந்தக் கண்ணீர் வடிப்பாள்.

1923-ம் ஆண்டு மார்ச் மாதம் இருபத்தெட்டாம் தேதி, சுத்த ஏகாதசியன்று, விடியற்காலையில், சென்னகேசவப் பெருமாள் கோயில் திருவிழாவுக்காகக் கொடியேற்றப்பட்டு, மணியொலியும் சங்கநாதமும் முழங்கிக் கொண்டிருந்த போது, ரங்கம்மாள் ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுத் தாள். அக் குழந்தைக்கு அனசூயா என்று பெயரிட்டனர்.

அனசூயா அசாதாரணக் குழந்தையாகவே வளர்ந்தாள். இரண்டு வயதில் ஒரு நாள் மாதுளை மரத்தடியில் அமர்ந்து, பத்மாசனமிட்டு, அரைக்கண் மூடி, மூச்சையடக்கி சமாதி யில் ஆழ்ந்து விட்டாள். அதைப் புரிந்து கொள்ளாமல், அவளுக்கு ஏதேதோ வைத்தியம் செய்தனர். பின்னர் ஒரு முறை, செருகிய கண்களுடன், மூச்சற்றுக் கிடந்தாள். விழித்துக்கொண்ட போது அதைப் பற்றிக் கேட்டதற்கு, "சாம்பவி முத்திரையில் இருந்தேன்" என்று பதில ளித்தாள். அதைக் கேட்டு எல்லோரும் ஆச்சரிய மடைந்தனர்.

ஒரு நாள் பொன்னூரிலிருந்து தாயுடன் வண்டியில் வந்து கொண்டிருந்த அனசூயா, ஓரிடத்தில் இறங்க வேண்டும் என்று கூறவே, இறக்கி விட்டார்கள். அங்கு

அமர்ந்து, ''இது நல்ல இடம். இங்கேயே தங்கி விடுவோம்'' என்றாள்.

''இங்கே வீடே இல்லையே. எப்படித் தங்குவது?'' என்று தாய் கேட்டாள்.

''அது அவசியமா என்ன? நான் இங்கேயே இருந்து விடுகிறேன்'' என்று புன்னகைத்த வண்ணம் கூறினாள் அனசூயா.

''அம்மா இல்லாமல் குழந்தை தனியாக இருக்க முடியுமா?'' என்று கேட்டாள் ரங்கம்மா.

''ஏன் முடியாது? நீ போன பிறகு நான் அம்மாவாக இருப்பேன்'' என்று கூறினாள் சிறுமி.

இது நடந்த இரண்டு ஆண்டுக்கெல்லாம் ரங்கம்மா மறைந்து விட்டாள். பொன்னூரில் அனசூயா அமர்ந்த அதே இடத்தில்தான், தற்போது சகஸ்ரலிங்கேச்வரர் ஆலயத்திலுள்ள பிரமராம்பிகையின் திருச்சந்நிதி இருக்கிறது!

அனசூயாவுக்கு மூன்று வயது இருக்கும் போது அவள் கடும் காய்ச்சலுக்கு ஆளானாள். குழந்தை இறந்துவிடுமோ என்று அஞ்சிய ரங்கம்மா, கதறித் தீர்த்து விட்டாள். அப்போது மரிதம்மா என்ற மூதாட்டி, ''சென்னகேசவப் பெருமாள் கோயிலிலுள்ள ராஜ்யலட்சுமி யந்திரத்தின் சக்தியால் குழந்தை பிழைத்து விடுவாள்'' என்று சொன்னாள். அதைக் கேட்டுக் கொண்டிருந்த அனசூயா, கண் விழித்து, ''அது ராஜ்யலட்சுமி யந்திரம் அல்ல; ராஜராஜேஸ்வரி யந்திரம்'' என்று வெடுக்கென்று கூறினாள். 1958-ல் மன்னவா கிராமத்திற்கு அம்மா சென்றிருந்த போது அந்த யந்திரத்தை எல்லோருக்கும் காட்டினார்.

அனசுயாவுக்கு நான்கு வயது இருக்கும் போது ரங்கம்மா இறந்து விட்டாள். சீதாபதி துயரம் தாங்காமல

கண்ணீர் வடித்தார். சிறுமி அனசூயா தன் பிஞ்சு விரல்களால் தந்தையின் கன்னங்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்தாள். அப்போது அவரது துயரம் பன்மடங்காயிற்று.

அந்த சோக நிகழ்ச்சியை அவளுக்குப் புரிய வைப்பதற்காக, "கண்ணே, உன் அம்மா போய் விட்டாள். இனிமே திரும்பியே வர மாட்டாள்" என்று மீண்டும் மீண்டும் கூறினார்.

"அம்மா எங்கே போயிட்டாப்பா?" — சிறுமி அமைதியாகக் கேட்டாள்.

"ஆமா! எங்கே போயிட்டாள்?...." என்று முணுமுணுத்தவாறு தன்னையே கேட்டுக் கொண்டார் தந்தை

"அப்பா, அம்மா எங்கேயிருந்து வந்தாப்பா?" என்று கேட்டாள் சிறுமி.

"உங்கம்மா செத்துப் போயிட்டாம்மா" என்று கதறினார் தந்தை. அவர் வேதனை அவருக்கு.

"செத்துப் போயிட்டான்னா என்னப்பா அர்த்தம்?"

"அவ போயிட்டாம்மா!"

"அம்மா எங்கேயும் போகலையே. இதோ படுத்துண்டிருக்காளே" என்று தரையில் கிடத்தப்பட்டிருந்த சடலத்தை சுட்டிக் காட்டியது குழந்தை.

உண்மையைப் புரிந்து கொண்டால் குழந்தை பயபடப் போகிறதே என்று கருதிய ஒருவர், "அம்மா தூங்கிண்டிருக்காம்மா" என்று கூறினார்.

"அம்மா தூங்கிண்டிருந்தா ஏன் எல்லோரும் அழறா? தினம் ராத்திரி அம்மா தூங்கற போது, ஒருத்தரும் அழவே மாட்டாளே" என்று கேட்டது குழந்தை. பெரியவர்கள் வாயடைத்துப் போனார்கள்.

சிறுமியின் கேள்விகளையும் தந்தையின் தவிப்பையும் கண்ட தாத்தா சிதம்பரராவ், சீதாபதியையும் அனசூயா வையும் மேல் மாடிக்கு அழைத்துச் சென்று விட்டார்.

அங்கும் அனசூயா சும்மாயிருக்கவில்லை.

"செத்துப் போறதுன்னா என்ன தாத்தா?" என்று பெரியவரிடம் கேட்டாள். அவர் தலையைச் சொறிந் தார்.

"செத்துப் போறவாளெல்லாம் எங்கேயிருந்து வரா தாத்தா?" என்று மற்றொரு கேள்வியைக் கேட்டாள் அவள்.

"அம்மாவின் வயத்துலேருந்து வரா?" என்றார் தாத்தா.

"அம்மா வயத்தில எப்போதும் குழந்தைகள் இருக்குமா தாத்தா?"

"இருக்காதும்மா."

"அப்படின்னா எங்கேயிருந்து குழந்தை வருது?"

"சாமி அனுப்பறாரு அம்மா."

"சரி, செத்துப் போனப்புறம் அவா எங்கே போறா?",

"சாமிகிட்டே போறா..."

"ஏன்?"

"அது அவர் இஷ்டம்"

"நம்பளை சாமி அனுப்பறார். கடைசியிலே அவர் இஷ்டப்படி அவர் நம்மை அழைச்சுண்டு போயிடறார். அதுக்காக நாம் எதுக்கு அழணும் தாத்தா?"

குழந்தை கேட்டது. பெரிய கேள்வியாகக் கேட்டது. அதைக் கேட்ட சிதம்பர ராவுக்கு ஆனந்தம் தாங்க முடிய

வில்லை. வீட்டில் நிலவிய துக்க சூழ்நிலையையும் மறந்து, சிறுமியைக் கட்டித் தழுவி உச்சி முகர்ந்தார்.

சீதாபதிக்கும் தூக்கி வாரிப் போட்டது. பெண்ணை ஆச்சரியத்துடன் பார்த்தார்,

"அப்போ நீங்க சொல்லுங்கோ. இப்ப நாம் எதுக்கு அழணும்?" என்று அவரைப் பார்த்துக் கேட்டாள் அனசூயா.

அவருக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது.

"அம்மா செத்துப் போயிட்டாளேம்மா" என்று நெஞ்சடைக்கக் கூறினார்.

"உண்மையான அம்மா யாருப்பா? நம்மை விட்டு நிஜமாப் போயிட்டாளே, அவளா? அல்லது இந்த உடலா? இந்த உடல்தான் அம்மா என்றால், அவள் நம்மைவிட்டுப் போகவில்லை. நம்மை விட்டுப் பிரிந்த வஸ்துதான் அம்மா என்றால், அதை நாம் பார்த்ததேயில்லை. அப்படியிருக்கும்போது எதற்காக நாம் துக்கப்பட வேண்டும்?" என்று கேட்டாள் நான்கு வயதே நிரம்பிய அந்த அதிசயச் சிறுமி.

பதினாறாவது வயதில் தமது மரணத்தை ஒத்திகை பார்த்து 'அழிவது இந்த உடல்தான், நமக்குள்ளிருந்து நம்மை இயக்கும் ஆன்ம சக்தி என்றுமே அழிவதில்லை' என்று அறிந்து கொண்டவர் ஸ்ரீ ரமண மகரிஷி. அக்கணமே ஆன்ம ஞானம் பெற்ற அவர், 'உடலும் பெயரும் நான் அல்ல. அழியாத சச்சிதானந்த மெய்ப் பொருளே 'நான்' என்றும், அதை உணருவதே ஆன்ம விசாரமும் ஆன்ம விடுதலையும் ஆகும்' என்றும் உலகிற்குப் பறை சாற்றினார்.

நான்கு வயதுச் சிறுமி அனசூயா, தனது தாய் ரங்கம்மா இறந்த போது, சுற்றிலும் கண்கலங்கி நின்றிருந் பெரியவர்களுக்கு இந்தத் தத்துவத்தையே எடுத்துக் கூறினாள்.

'ரங்கம்மா என்ற பெயர் கொண்ட உடல் மறைந்து விட்டது. ஆனால், அம்மா என்ற மூலசக்தி இறக்கவில்லை. அதற்கு தொடக்கமும் கிடையாது. முடிவும் கிடையாது. முதலும் முடிவும் அதுவே என்று தனது இளம் பருவத்தில் கூறிய அந்தப் பேருண்மையின் வடிவமாகவே இன்றும் திகழ்ந்து கொண்டிருக்கிறார் ஜில்லெலமுடி அம்மா,

'இருப்பது ஒன்றுதான். 'அது' பல பெயர்களும் வடிவங்களும் கொண்டு எல்லாமுமாக நம் கண்களுக்குக் காட்சி தருகிறது. 'அது'தான் நான், இந்தக் கட்டிலில் அமர்ந்திருக்கும் அனசூயா தேவியல்ல. எல்லாவற்றுக்கும் மூல காரணமான அம்மா என்ற அருட்சக்தியே நான். அந்த அருட்சக்தியின் வடிவங்களான நீங்கள் என் குழந்தைகள்' என்று தம்மைத் தரிசிக்க வருபவர்களிடம் அம்மா, கூறுவது வழக்கம்.

ஒவ்வொரு ஜீவனுள்ளும் தெய்வ சக்தி இயங்குகிறது. அது, எங்கும், எதிலும் வியாபித்திருக்கிறது. அதைத் தவிர வேறாகத் தோன்றுவதெல்லாம் மாயத் தோற்றங்களே! இந்த உண்மையை அறிந்தால் வேற்றுமையுணர்ச்சிகளுக்கு இடமேது? இந்த அத்வைத ஞானச் செல்வத்தின் சின்னமாக அம்மா காட்சி தருகிறார்.

'நான் குருவுமல்ல; நீங்கள் சீடர்களுமல்ல.'

'நான் வழிகாட்டியும் அல்ல, நீங்கள் வழிபோக்கர்களும் அல்ல,

'நான் அம்மா; நீங்கள் என் குழந்தைகள்.'

என்று அந்த அன்புத்தாய் தம் உண்மை நிலையைப் பிரகடனப் படுத்திக் கொள்கிறார்.

அந்த உலக மகா சக்திக்குக் குண பேதங்களோ, வர்ண பேதங்களோ எப்படி இருக்க முடியும்? தன் பிரதி பிம்பங்களை, தன்னில் தோன்றிய சகல ஜீவராசிகளையும் எவ்வித வேற்றுமையுமின்றி தம் அருமைக் குழந்தைகளாக அரவணைத்து அவர் அன்பு செலுத்துவதில் வியப்பில்லை.

"தாயே, நீங்கள் இந்த நிலையை எப்போது, எப்படி பெற்றீர்கள்?" என்று யாராவது கேட்டால், "நான் எப்போதும் இதே நிலையிலேதான் இருந்து வருகிறேன். நான் ஒருவித மாறுதலும் அடையவில்லை. ஏதாவது மாற்றம் தெரிந்தால் அதற்கு உங்கள் மதிப்பீடும் மனநிலையும்தான் காரணமாக இருக்க வேண்டும்" என்று கூறுகிறார். பக்தி, கர்ம, யோக மார்க்கங்களாலோ, ஜப, தப, தியான சாதனங்களாலோ அவர் இப் பெருநிலை அடையவில்லை. இயல்பாகவே பரப் பிரும்மமாக இயங்கிக் கொண்டிருக்கும் ஞானத்தாய் அவர்.

"அம்மா, நீங்கள் எந்தக் கடவுளை பூஜை செய்கிறீர்கள்?" என்று அங்கு வருபவர்களில் சிலர் கேட்கிறார்கள்.

"என்னை நாடிவரும் அன்புச் செல்வங்கள்தான் நான் வழிபடும் தெய்வங்கள்" என்கிறார் அம்மா. எல்லையற்ற அன்புதானே பக்தி!

ஆறு வயதில் அம்மா, ஒரு பண்டிதரின் புராண பிரவசனத்தைக் கேட்கச் சென்றார். அந்தப் பண்டிதர் இத்தனை அக்கறையுடன் குழந்தை கதை கேட்கிறதே என்று ஆச்சரியப்பட்டு, "நீ யாரம்மா?" என்று சாதாரணமாகக் கேட்டார். அதற்கு அம்மா, "நான் யார் என்று தெரிந்து கொள்ளத்தான் இங்கே வந்தேன்" என்றார். பண்டிதர் விழித்தார்.

"சாத்திரங்களை அறிந்தால் மட்டும் போதாது. புரா ணங்களைப் படித்தால் மட்டும் போதாது. 'நான் யார் என்று ஆன்ம விசாரம் செய்ய வேண்டும்'' என்று அம்மா அச்சிறு வயதிலேயே அவருக்கு உணர்த்தினார்' இன்றும் அதையேதான் கூறுகிறார். 'மலர் மாலையில் நார் மறைந்திருப்பது போல், நமக்குளே உண்மையான 'நான்' மறைந்திக்கிறது. மலர்களை ஒவ்வொன்றாக அகற்றினால் நார் கண்ணுக்குப் புலப்படும். நம் அகங் காரம் விலக விலக, உண்மையான 'நான்' தெரியும்; சத் திய தரிசனமும் ஆகும்.

அம்மா தம்மை நாடி வருபவர்களுக்கு உபதேசம் செய் வதில்லை. நீண்ட சொற்பொழிவுகளை ஆற்றுவதில்லை. யாராவது கேள்விகள் கேட்டால் பதில் கூறுகிறார். மிகச் சாதாரணமான உதாரனங்களைக் கூறி உண்மையை மனத் தில் பதிய வைக்கிறார், எளிய மொழியில் விளக்குகிறார். விளையாட்டாகப் பேசி வேதாந்தக் கருத்துக்களைப் புரிய வைக்கிறார்,

அவருடைய பொன் மொழிகள் இதயத்தில் பதிந்து, மனத்தில் புகுந்து, வாழ்வில் கலந்து, நல்வழிப்படுத்தி பேரமைதியைத் தருவதற்கு உதாரணமாக பல பேர் தங் கள் சொந்த அனுபவங்களைக் கூறி வருகிறார்கள்.

எந்த மொழியில் பேசினாலும் அம்மா புரிந்துகொண்டு விடுவாராம். அதைப் பற்றி ஆச்சரியத்துடன் ஒருவர் கேட்ட போது அம்மா, "மொழிக்கு ஆதாரம் சப்தம். சப்தத்திற்கு ஆதாரம் எண்ணம். எண்ணத்திற்கு ஆதாரம் மனம். மனத் திற்கு ஆதாரம் ஆன்ம சக்தி. அந்த சக்தி என்னையும் உங்களையும் பிணைப்பதால் நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பது எனக்கு விளங்கி விடுகிறது'' என்றாராம். இத னாலேயே மௌன மொழி, எல்லா மொழிகளையும் விட சக்தி வாய்ந்தது என்று கூறுகிறார் அவர். ஓர் இதயம் மற்

றோர் இதயத்தைப் புரிந்து கொண்டுவிட்டால், மொழிக்கு அவசியமே யில்லை' என்று அம்மா கூறுவது உண்டு.

அம்மாவின் 'குழந்தைகள்' அம்மாவுக்குத் தெரியாததே கிடையாது என்று நம்புகிறார்கள், எத்தனையோ வருஷங் களுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சிகளை இப்போது நடப் பது போல், ஒரு விவரம் விடாமல் யார் என்ன பேசினார், என்ன கலர் உடை உடுத்துக்கொண்டு வந்தார், எப்படி நின்று கொண்டிருந்தார் என்று கண் முன்னால் தெரிவது போல் சர்வசாதாரணமாக விவரிப்பாராம். அது மட்டுமல்ல; அன்பர் ஒருவர் வீட்டில் முதல் நாள் நடந்த நிகழ்ச்சியை நேரில் பார்த்த மாதிரி கூறுவாராம். இது "எப்படித் தங்களுக்குத் தெரியும் அம்மா?" என்று கேட்டால், "என்னமோ சொன்னேன். அது சரியாகி விட்டது" என்று கூறி சிரித்து மழுப்பி விடுவாராம்.

அம்மா, தங்கள் வாழ்க்கையில் பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டியிருப்பதாக பக்தர்கள் கூறுகிறார்கள். ஆனால், அவற்றைப் பற்றி அம்மாவிடம் கூறினால், "அப் படியா?" என்று ஆச்சரியத்துடன் கேட்பாராம்.

யோக சித்தர்களைப் போல் அம்மா, அன்பர்களின் நோய்களைத் தாமே ஏற்றுக்கொண்டு குணப்படுத்தியிருக் கிறார் என்று சொல்லுகிறார்கள். தாம் ஆகாரம் உண்டு பிறர் பசியைப் போக்கியும் இருக்கிறாராம். அவரைப் பற் றிய புத்தகங்களையும், மாத்ருஸ்ரீ பிரசுரத்தாரால் 'மாத்ருஸ்ரீ' என்ற பெயரில் பாபட்லாவிலிருந்து வெளிவரும் பத்திரிகை யையும் படித்தால் அம்மா அன்றாடம் நிகழ்த்தி வரும் அற்புதங்களை அறிந்து கொள்ளலாம். ஆனால், அந்த அற் புத நிகழ்ச்சிகளையெல்லாம் தாம் நிகழ்த்தியதாக அம்மா ஒப்புக் கொள்வதே இல்லை. அபூர்வ சக்திகளைக் காட்டி மக்களை மயக்க அவர் விரும்பவில்லை. இம்மாதிரி சக்தி களைக் கண்டு, பிரமித்துப் போய் அதனால் ஏற்படும் நம்

பிக்கை நல்லதல்ல என்று கருதுவதுதான் அதற்குக் காரணம். எல்லா சக்திக்கும் மூல காரணம் ஆன்மசக்தி தான். அதைத் தன்னுள் உணர்வதே ஞானப் பெருநிலை, அதுதே முக்திப் பெருவாழ்வு, அதுவே பேரின்ப நிலை' அதுவே சாந்தி நிலவும் நல்வாழ்வு என்று மக்களை அறிய வைப்பது ஒன்றையே முக்கியமாகக் கருதுகிறார் அம்மா.

மக்களை நம்ப வைப்பதற்காக பொருள்களை வரவழைக்கும் அற்புத சித்து விளையாட்டுகளை அம்மா விரும்புவதில்லை என்பதைக் காட்ட ஜில்லெலமுடியில் நடந்த நிகழ்ச்சியொன்றைக் கோபால கிருஷ்ணமூர்த்தி என்ற அன்பர் என்னிடம் கூறினார்.

ஒரு சாமியார், அம்மாவைத் தரிசிக்க வந்தார். அம்மாவுக்கு தானே முதலில் பூஜை செய்யப் போவதாகவும் வேறு ஒருவரும் கற்பூரார்த்தி காட்டக் கூடாது என்றும் கூறிவிட்டு, நீராடச் சென்றார். பின்னர், அம்மாவின் முன் வந்து நின்று உயரே கையை நீட்டி ஒரு பெரிய கற்பூரக்கட்டியை வரவழைந்தார். அங்கு நின்றிருந்தவர்கள் இந்த வேடிக்கையை ஆர்வத்தோடு பார்த்தார்கள். அம்மா சலனமின்றி, முகத்தில் ஒருவித ஆச்சரிய பாவமுமின்றி அமர்ந்திருந்தார்.

அருகில் நின்றிருந்த கோபால கிருஷ்ணமூர்த்தியிடம் சாமியார் கற்பூரத்தைப் பற்ற வைக்கும்படிக் கூறினார். அன்பரும் வத்திக் குச்சியைக் கிழித்து ஏற்றினார். அரை விநாடி எரிந்து, கற்பூரம் அணைந்து விட்டது. மறுபடியும் ஏற்றினார். மீண்டும் அணைந்து விட்டது. கற்பூராரத்தி கற்றிக் காட்டுவதற்குள் அரைப்பெட்டி வத்திக் குச்சிகள் தீர்ந்து விட்டன. சாமியார் முகத்தில் அசடு வழிந்தது. அம்மாவின் மகிமையை உணர்ந்தார். தன் சிறுமை அவருக்குப் புரிந்து விட்டது.

அப்படியே அம்மாவின் கால்களில் விழுந்தார். "என்னை மன்னித்து விடுங்கள். என்னைப் பெரியவனாக

நினைத்துக் கொண்டு உங்களிடம் தகாத முறையில் நடந்து கொண்டு விட்டேன்'' என்று கண் கலங்கக் கூறினார்

அம்மா சிரித்தார். ''நாலணா காசு கொடுத்தால் கடையில் கற்பூரம் வாங்கலாமே! இதற்காக உங்கள் சக்தியைப் பயன்படுத்த வேண்டுமா?'' என்று கேட்டார்.

ஒரு சமயம், ஒரு யோகி, ஸ்ரீராம கிருஷ்ணரிடம் தம்மால் தண்ணீரின் மீது நடந்து காட்ட முடியும் என்று கூறினார். அப்போது பரமஹம்சர், காலணா கொடுத்தால் படகுக் காரன் அந்தக் கரையில் கொண்டு விட்டு விடுவான். இந்தச் சின்ன விஷயத்துக்காக உங்கள் யோக சக்தியைப் பயன் படுத்த வேண்டுமா?'' என்று அவரிடம் கேட்டார். கற்பூரம் வரவழைத்த சாமியாரிடம் அம்மா கூறியதைக் கேட்டபோது எனக்கு இந்தப்பழைய நிகழ்ச்சி நினைவிற்கு வந்தது.

எல்லோருக்கும் பொதுவான ஜில்லெலமுடி இல்லத்தில் இருப்பவர்கள் அத்தனை பேரும் அன்புத் தொண்டர்கள். அங்கு ஒருவரையொருவர் பெயர் சொல்லி அழைப்ப தில்லை. எல்லோரும் அம்மாவின் குழந்தைகளாகவே தங்களைக் கருதுவதால், பெண்களை 'சகோதரி' என்றும், ஆண்களை 'சகோதரன்' என்றே அழைத்துக் கொள் கிறார்கள்.

அந்தக் குடும்பத்தின் 'அப்பா'வும் அங்கு இருந்தார்' அவர்தான் நாகேச்வரராவ். ஜில்லெலமுடி கிராமத்தின் கணக்குப் பிள்ளை. அவர், 'அம்மா'வின் கணவர்.

அனசூயா பிறந்ததுமே, அத்தை மகன் நாகேச்வர ராவுக்குத் திருமணம் செய்து வைத்து விட வேண்டும் ஏன்று பெரியவர்கள் நிச்சயித்தார்கள். அதன் படியே அம்மாவுக் குப் பதினான்கு வயது ஆன போது அவருக்கும் நாகேச்வர

ராவுக்கும் திருமண நடந்தேறியது. தெய்வாம்சம் பொருந்திய அப்பெண்மணி, ஆன்மிக நெறியில் உயர்ந்த நிலையி இன்றுவரை அந்தக் குடும்பத்தின் தலைவியாகவும், தருமம் காக்கும் வாழ்க்கைத் துணைவியாகவும் வாழ்ந்து வருகிறார்.

அம்மாவின் உயர்ந்த நிலையை உணர்ந்து கொண்ட சிலர், "தாங்கள் ஏன் திருமணம் செய்து கொண்டீர்கள்?" என்று கேட்டபோது அவர். "திருமண வாழ்க்கை நமது ஆன்மிக மலர்ச்சிக்குத் தடையாக இருக்காது என்பதைக் காட்டுவதற்காகத்தான் நான் சம்சாரப் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன்" என்று கூறினாராம். ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இணைவதே திருமணத்தின் தத்துவம் என்றும் அவர் வலியுறுத்தி வருகிறார்.

தினமும் அம்மா தமது திருமாங்கல்யத்திற்கு அபிஷேகம் செய்து, அத்தீர்த்தத்தைப் பருகுகிறார் என்று ஜில்லெலமுடி இல்லத்தைச் சேர்ந்த ஒருவர் கூறியதைக் கேட்டபோது அம்மாவை பாரதத்தின் பண்புசால் மகிமைக்கு மணம் சேர்க்கும் ஒப்புயர்வற்ற ஓர் இல்லத்தரசியாக நான் தரிசித்தேன்.

நாகரிக மறுமலர்ச்சியின் பெயராலும், சமுதாய முன்னேற்றத்தின் பெயராலும், பெண்களின் உரிமையின் பெயராலும் எத்தனையோ மாற்றங்கள் ஏற்பட்டு, நம் பெண்ணினம் நிலை குலைந்து, குழம்பிப் போயிருக்கும் இந்நாளில், அம்மாவின் வாழ்க்கை நம்பிக்கையொளி வீசும் கலங்கரை விளக்கமாக ஓங்கி நிற்கிறது. அம்மா கூறுவதைக் கேட்போம்:

திருமாங்கல்யம் என்பது என்ன? அவ்விரு தங்கத் தகடுகளும் கணவனின் திருவடிகள். அவர் எங்கிருந்தாலும், என்ன செய்து கொண்டிருந்தாலும் அவரது

பாதங்கள் உன் நெஞ்சைத் தொட்டுக் கொண்டிருக்கின்றன. அப்பாதங்களுக்குச் சேவை செய்வதை விட ஒரு பெண் மணிக்கு எளிதான காரியம் வேறு உண்டா? ஆனால், எத்தனை பேர் திருமாங்கல்யத்தின் இப் புனிதத்தை உணரு கிறார்கள்? அதனால் சிலர் டப்பாக்களின் மூடிகளைத் திறக்கிறார்கள். வேறு சிலரோ, அதனால் தங்கள் பற் களைக் குத்துகிறார்கள்...ஒரு பெண்ணுக்குக் கணவனே தெய்வம். அவனுக்குச் சேவை செய்வதால் நாம் ஆன்ம விடுதலை பெறுகிறோம். கணவரின் மகிழ்ச்சிக்காகவும் அவரது உயர்வுக்காகவும் சேவை செய்வதாக நினைக் காமல் நமது திருப்திக்காக, நமது நலனுக்காக அன்புப் பணியாற்ற வேண்டும். இதுதான் குடும்பப் பெண்ணின் தருமம். இல்லத்தையே ஆலயமாக நினைத்து, வாழ்க்கைத் துணைவனையே அங்கு உறையும் தெய்வமாக மதித்து, வழிபட்டு, உன்னத நிலை அடையும் பெரும் பேற்றைப் பெற்றிருக்கிறாள் பெண். கண்ணுக்குத் தெரியாத கட வுளைக் கும்பிட்டுக் கரையேற நினைக்கும் துறவியை விட ஒரு உத்தம மனைவி எவ்வளவோ பாக்கியம் செய்தவள்.

பெண்ணுக்கு இப்படியொரு நல்வாய்ப்புக் கிடைத்தி ருக்கும்போது, அவளுக்கு மந்திரோபதேசம் எதற்கு? யோக சாதனங்கள் எதற்கு? தியான சுலோகங்கள் தான் எதற்கு?

அன்பின் திருவுருவமாகவும், கருணையின் இருப் பிடமாகவும் ஜில்லெலமுடியில் அருளாட்சி புரிந்து கொண் டிருந்த அதிசய அன்னை, 1985-ம் ஆண்டு தன் உடலுருவை மறைத்துக் கொண்டார். தற்போது 'அனு சூயேஸ்வராலயத்தில் அருவமாக எழுந்தருளி, தன் குழந்தைகளை அவர்களது கோரிக்கைகளை நிறைவேற்றி,

அன்புடன் ரட்சித்து வருகிறார். நமது கண்களுக்குப் புலப்படாத அன்னை, அங்கு வரும் அத்தனைபேர் இதயத்திலும் அமர்ந்து, அமைதியும் ஆனந்தமும் அளித்து வருகிறார். அந்த ஆத்மானுபவத்தில், ஒவ்வொருவரும் 'அம்மா' என்ற தத்துவத்தை, சத்திய வஸ்துவைத் தரிசித்து புண்ணியம் பெற்று வருகிறார்கள்.

## இந்திரகீலாத்ரி முருகன்

அடுத்து, விஜயவாடா இந்திரகீலாத்ரி மலையில் திருக்கோயில் கொண்டிருக்கும் கனக துர்க்கம்மாவைத் தரிசிக்கத் திட்டமிட்டிருந்த எங்களுக்கு, அம்மலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சுப்ரமணிய சுவாமியை முதலில் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது.

விஜயவாடா ரயில் நிலையத்திற்கு எதிரில் ஒரு சிறு மலை இருந்தது. அதன் உச்சியில் ஒரு பெரிய ஸ்தூபி தெரிந்தது. விசாரித்த போது, அது காந்திஜியின் நினைவுச் சின்னம் என்று அறிந்தோம். அடுத்த கணம் எங்கள் கார் காந்தி மலையில் ஏறியது.

மலையுச்சியிலிருக்கும் நினைவுக் கம்பம், காந்திஜியின் உன்னதக் கொள்கைகளைப் போன்று உயர்ந்து நிற்கிறது. 1964ம் ஆண்டு, முன்னாள் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி அடிக்கல் நாட்ட, 1968-ல் முன்னாள் ஜனாதிபதி டாக்டர் ஜாகிர் உசேன் அதைத் திறந்து வைத்திருக்கிறார். அங்கு காந்திஜியின் வாழ்க்கைச் சரிதம் ஒளி — ஒலிச் சித்திரமாக அமைக்கப் பட்டிருக்கிறது. மலையைச் சுற்றிலும் சிறுவர்களுக்கான குட்டி ரயில் ஒன்று விடப் படுகிறது. ஊருக்கு மத்தியில் இருக்கும் அந்தச் சிறு மலையை தேசத் தந்தை

யின் புனித நினைவாலயமாக மாற்றி, விஜயவாடாவின் பெருமையை மேலும் உயர்த்தியிருக்கிறார்கள்.

இந்திரகீலாத்ரி மலை உச்சியில் மூன்று கோயில்கள் இருக்கின்றன. நடுவில் சுப்ரமணிய சுவாமி கோயிலும், அதற்குத் தென்புறமும், வடபுறமும் ஸ்ரீ சத்தியநாராயண சுவாமி, ஸ்ரீ ஆஞ்சநேய சுவாமி கோயில்களும் இருக்கின்றன. இம்மூன்று கோயில்களும் அங்கு தோன்று வதற்குக் காரணமாயிருந்தவர் ஸ்ரீ இத்திபில்லி குருவுலு தாஸ்காரு என்னும் பக்தர்.

எழுபது ஆண்டுகளுக்கு முன் விசாகப்பட்டினத்தின் அருகில் பிறந்த அவர், வீடு கட்டும் மேஸ்திரியாக வாழ்க்கையைத் தொடங்கினார். பதினைந்தாவது வயதில் பிழைப்பைத் தேடி விஜயவாடாவுக்கு வந்தார். வெற்றிலை பாக்குக் கடை வைத்து வியாபாரம் செய்து கொண்டிருந்தவர், நண்பர் ஒருவரோடு சேர்ந்து 1917-ம் ஆண்டில், ஸ்ரீ ஆஞ்சநேயர் கோயிலைக் கட்டினார். கல்வியறிவு இல்லாத குருவுலுதாஸ் தமது முப்பதாவது வயதில் ராமாயண, மகாபாரத காலட்சேபங்கள் செய்யும் திறனைப் பெற்றார். 1937ம் ஆண்டில் ஸ்ரீ சத்தியநாராயண சுவாமி ஆலயத்தைக் கட்டினார்.

கோயில் விஷயமாக அவருக்கும், அவருடைய நண்பர் ஒருவருக்குமிடையே ஏதோ மனக்கசப்பு ஏற்பட்டதால், மனம் முறிந்து போன குருவுலுதாஸ், தம் சொந்தக் கிராமத்திற்கே சென்று விட்டார். அடுத்த ஆண்டு கும்பாபிஷேகத்திற்கு ஏற்பாடு செய்தார்கள். ஆனால், கும்பாபிஷேகத்தின் போது மூல விக்கிரகத்தின் கை உடைந்து விடவே, அதை ஓர் அபசகுனமாகக் கருதியவர்கள், பண்டிதர்களைக் கலந்து ஆலோசித்தார்கள். ஒரு பெரி

யவர், குருவுலுதாஸ் அவர்கள் முன்னிலையில்தான் இக் கும்பாபிஷேகம் நடைபெற வேண்டும் என்று கண்டிப்பாகக் கூறவே, கிராமத்திலிருந்து தாஸ் வரவழைக்கப்பட்டார். பின்னர், வேறொரு விக்கிரகத்தைத் தயாரித்து அதைப் பிரதிஷ்டை செய்வித்துக் குடமுழுக்கும் செய்தார்கள். அடுத்த ஆண்டு தனக்குப் பிறந்த ஆண் குழந்தைக்கு சத்தியநாராயணா என்று பெயரிட்டார் தாஸ்.

குருவுலுதாஸ் தினமும் சூரிய நமஸ்காரம் செய்வது வழக்கம். 1943-ம் ஆண்டு ஒரு நாள் அவர் சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்த போது அவர் எதிரில் ஒரு நாகப்பாம்பு படம் எடுத்து ஆடியது. அப்போது தாஸ், "நாகேந்திரா, என் சக்திக்குத் தக்கவாறு உனக்கு ஒரு சந்நிதி அமைக்கிறேன்" என்று கூறினார். அதைக் கேட்டதும் அப் பாம்பு அருகிலிருந்த 'புற்றுக்குள் போய் விட்டது.

இந்த நிகழ்ச்சி நடந்த ஆறாவது நாள் முருகன், மயிலோடு தாஸின் கனவில் தோன்றி, "பக்தா, பாம்பு உருவில் அன்று நான்தான் வந்தேன். நீ சுப்ரமணிய சுவாமி ஆலயம் ஒன்று கட்ட வேண்டும்" என்று பணித்தாராம். மறுநாள் குருவுலுதாஸ் தனக்கு தெரிந்த ஜோசியரை அணுகி, சுப்ரமணிய சுவாமியைப் பற்றிக் கேட்டார். தமிழ் நாட்டிற்குச் சென்று அறிந்து வரும்படி ஜோசியர் அவரிடம் கூறவே, தாஸ் தமிழகத்திலுள்ள பல முருகர் தலங்களுக்குச் சென்று வழிபட்டார். 1943-ம் ஆண்டு கார்த்திகை மாதம், இந்திரகீலாத்ரியில் சுப்ரமணிய சுவாமி ஆலயத்தைக் கட்டத் தொடங்கினார். அப்போது எதிர் பாராத ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

கோயில் கட்டுவதற்காக மலையை உடைக்கத் தொடங்கினார்கள். அப்போது அங்கு ஒரு பெரிய கல் குறுக்கே

இருப்பது தெரிந்தது. அதை அப்புறப் படுத்திய போது, அதன் அடியில் ஒரு கற்சிலை தென்பட்டது. சுரண்டிப் பார்த்தபோது, அது ஆண்டிக் கோலத்தில் இருக்கும் பால சுப்ரமணியன் எனப் புரிந்தது. குருவுலுதாஸ் பிரமித்துப் போய் விட்டார். அருகிலேயே ஒரு வேப்ப மரமும் இரண்டு பாம்புப் புற்றுகளும் இருப்பதைக் கண்டார். சுவாமி இருந்த இடத்தை ஒரு குகையாக அமைத்து, தினமும் திருவிளக்கு ஏற்றி வந்தார்.

பின்னர், அந்தக் குகைக்கு முன் ஸ்ரீ வள்ளி-தேவசேனா வுடன் கூடிய சுப்ரமணிய சுவாமி கோயிலை எழுப்பினார். அவர் கையில் பணம் கிடையாது. எங்கெங்கெல்லாமோ சென்று ஹரிகதா காலட்சேபங்கள் செய்து சம்பாதித்த பணத்தையும், அன்பர்கள் கொடுத்த நன்கொடையையும் சேர்த்துப் பெரும் இன்னல்களுக்கு இடையே அத் திருப் பணியைச் செய்து முடிந்தார் தாஸ். 1954-ஆம் ஆண்டு அந்த பக்தர் முருகனின் திருவடிகளைச் சேர்ந்தார்.

அதற்குப் பிறகு நான்கைந்து வருஷங்கள் சரியாகப் பூஜைகள் நடைபெறவில்லை. சத்தியநாராயணாவின் கனவில் முருகன் வந்து பூஜையைப் பற்றி நினைவுபடுத்தியதால் 1959 – லிருந்து சந்தாதார்களைச் சேர்த்து, பூஜையை விடாமல் செய்து வந்தார் அவர். பின்னர், சத்தியநாராயணா வியாபாரத்திற்காகப் பத்ராஜலம் சென்றதால், மீண்டும் பூஜையில் தடைகள் ஏற்பட்டன. அவருக்கு வியாபாரத்திலும் நட்டம் ஏற்பட்டது. எனவே, கோயிலைக் கவனிப்பதற்காக சத்தியநாராயணா விஜயவாடாவுக்கே திரும்பி வந்தார். 1964–ஆம் ஆண்டில் வேல் சாத்த வேண்டும் என்று ஒரு பக்தருக்கு அருள்வாக்கு வந்தது.

இதையடுத்து, புற்றிலிருந்து இரு பாம்புகள் புறப்பட்டு, குகையிலுள்ள பாலசுப்ரமணிய சுவாமியின் அருகில் போய்ப்

படுத்துக் கொண்டன. கிண்ணத்தில் பாலை ஊற்றி வைத்தார்கள். ஆனால், பாம்புகள் அதைச் சாப்பிடவே யில்லை.

அப்போது திடீரென்று பெருமழை பெய்யத் தொடங்கவே எல்லோரும் மண்டபத்தில் சற்றுநேரம் ஒதுங்கி விட்டுத் திரும்பி வந்து பார்த்தார்கள். என்ன ஆச்சரியம்! அப்போது அங்கு கிண்ணமும் இல்லை; பாம்புகளும் இல்லை. அவை புற்றுக்குள் போயிருக்க வேண்டும். தேடிப்பார்த்ததில், பால் கிண்ணம், பக்கத்தில் இருக்கும் ஆஞ்சநேயர் கோயில் கோபுரத்தின் மீது காணப்பட்டது. அன்றையிலிருந்து சுவாமிக்குப் பால் அபிஷேகத்திற்கு ஏற்பாடு செய்தார்கள். 1965-ஆம் ஆண்டில் வேல் கமிட்டி அமைத்து, வெள்ளி வேலும், வெள்ளி சேவற்கொடியும் செய்து வைத்திருக்கிறார்கள். அடுத்த ஆண்டில் கோயிலில் அபிஷேகம், பூஜை, நைவேத்தியம், திருவிழாக்களெல்லாம் சரிவர நடத்தி வைக்கும் பொறுப்பை சுப்பிரமணிய பக்த ஜன சபா ஏற்றுக் கொண்டது.

இந்தச் சபாவின் ஆதரவில், அன்பர்கள் தவறாமல் கொடுக்கும் உபயத்தொகையால் அன்றாடப் பூஜைகளும், ஸ்கந்த சஷ்டி, ஆடிக் கிருத்திகை, தைப் பூசம், பங்குனி உத்தரம், கார்த்திகை தீபம் முதலிய திருவிழாக்களும் சரிவர நடந்து வருவதாக வெங்கடேசன் கூறினார். திருப்புகழ் பஜனைகளும் திருப்படி விழாவும் நடைபெறுவதாகவும் அறிந்தேன்.

இந்திரகீலாத்ரியில் உறையும் முருகன் தன்னை ஆட்கொண்ட நிகழ்ச்சியையும் சுப்பிரமணிய பக்த ஜன சபா தோன்றிய வரலாற்றையும் உற்சாகத்துடன் கூறினார் வெங்கடேசன்.

எங்கெல்லாமோ பணியாற்றி விட்டு 1965-ஆம் ஆண்டில் விஜயவாடா வந்து சேர்ந்தார் அவர். சில வருடங்களுக்கு

முன் சுகுமாரன் என்ற தமது ஒன்றரை வயது குழந்தை திடீரென்று இறந்ததிலிருந்து விரக்தியடைந்து, தேவாலயங்களுக்குச் செல்வதை நிறுத்திக் கொண்டு, வீட்டிலேயே பூஜை செய்து கொண்டிருந்தார் அவர். மனைவிக்கு டைபாய்டு காய்ச்சல். சிறுவன் ரவி கீழே விழுந்து காலில் அடிபட்டுக் கொண்டிருந்தான். மன அமைதியற்றிருந்தவரை எம். எஸ். எஸ். மணி என்ற நண்பர், சுப்பிரமணிய சுவாமிக்கு வேல் செய்வதற்காகப் பணம் வசூலிக்கும்படி கேட்டுக் கொண்டார். முதலில் மறுத்தவர், பின்னர் மனம் மாறி நண்பர்களிடமிருந்து நூற்றிருபது ரூபாய் வசூல் செய்தார். பின்னர், கோயிலுக்கு வரும்படி அவரை அழைத்தார்கள். குடும்பக் கவலையே பெரிதாக இருந்ததால் வர மறுத்து விட்டார் வெங்கடேசன். வேல் கமிட்டியை முன்னின்று நடத்திய பி. எஸ். ராஜா ஐயர் என்பவர், 'நீங்கள் வந்த பிறகுதான் முருகனுக்கு தீபாராதனை நடக்கும்' கண்டிப்பாகக் கூறி விட்டார்.

மனம் குழம்பிய வெங்கடேசன், கால் வலியுடன் படுத்துக் கொண்டிருந்த சிறுவனின் அருகில் அமர்ந்து கொண்டிருந்தார். மணி காலை எட்டரை இருக்கும். அப்போது அவருடைய இளைய மகன், "அப்பா, எங்களை ரிக்ஷாவில் மலையடிவாரத்து அழைத்துக் கொண்டு போங்கள். முருகன் எப்படியும் எங்களை மலைமீது அழைத்துக் கொண்டு போய் விடுவார்" என்று கூறினான். தன் பையன் அழைத்தது முருகனின் கட்டளையைப் போல் அவருக்குத் தோன்றவே, குழந்தைகளை அழைத்துக் கொண்டு மலையடிவாரத்திற்குச் சென்றார். ரிக்ஷாவுக்குப் பணம் கொடுத்து விட்டு அவர் திரும்புவதற்குள் பிள்ளைகள் மலையேறிப் போய் விட்டிருந்தார்கள். வெங்கடேசனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அவசர அவசாரமாகப் படியேறிச் சென்று பார்த்

தார். இரு பிள்ளைகளும் முருகன் சந்நிதியில் நின்று கொண்டிருந்தார்கள். "எப்படிடா வந்தாய்? உன்னால் நடக்க முடிந்ததா?" என்று கேட்டார் தனது மூத்த மகனிடம். "காலில் ஒன்றுமே இல்லை. வலியே இல்லேப்பா" என்று கூறிய பையன் குகைக்கருகில் ஓடிச் சென்று குமரனைச் சுட்டிகாட்டி, "இந்த சாமிதான் அழைத்துக் கொண்டு வந்தார்" என்றான். வெங்கடேச னின் கண்கள் குளமாயின. அன்று முதல் முருகன் அவரைத் தன் அடிமையாக்கிக் கொண்டு விட்டான். நாளடைவில் மனைவியும் உடல் நலம் பெறத் தொடங்கினாள்.

முருகனின் திருவிழாக்களை நடத்தித்தரும் பொறுப்பும் வெங்கடேசனின் மீதே திணிக்கப்பட்டது. 'எல்லாம் முருக னின் செயல்' என்று எந்த சிரமத்தையும் பாராமல் அவர் அப்பணியைப் பெரும் பாக்கியமாகக் கருதி இன்முகத்தோடு ஏற்றுக் கொண்டார். 1967ம்-ஆம் ஆண்டு ஸ்ரீ சுப்ரமணிய பக்த ஜன சபாவைத்தொடங்கி அதைப் பதிவும் செய்தார். பல அன்பர்களின் ஒத்துழைப்பையும் உதவியையும் மூலதனமாகக் கொண்டு அந்த சபா ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி ஆலயத்தின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டு வருகிறது.

# விஜயவாடா கனகதுர்க்கா

ஆந்திரப் பிரதேசத்திலுள்ள பெரு நகரங்களில் விஜய வாடா முக்கிய இடத்தைப் பெற்றிருக்கிறது. புராணத்தில் இது 'விஜயவட்டா' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சில கல்வெட்டுகளில் 'ராஜேந்திர சோழபுரம்' என்ற பெயரும் காணப்படுகிறது.

இங்குள்ள இந்திரகீல மலையில் சுயம்புவாக எழுந்தருளி யிருக்கும் கனகதுர்க்கை இந்நகரத்திற்கு செல்வமும் மங்களமும் அளித்து வருகிறாள். தட்சிணப் பிரதேசத்தில் அட்டூழியங்கள் புரிந்து கொண்டிருந்த துர்கமா என்ற அசுரனை வதம் செய்த சண்டியாக அம்பிகை காட்சி தருகிறாள். மலர்ந்த திருவதனத்தில் புன்னகை யொன்று அரும்ப, எட்டுக் கரங்களில் ஆயுதங்கள் ஏந்தி, சிம்ம வாகனத்தில் அமர்ந்து, எழிற்கோலம் பூண்டிருக்கும் அன்னை பராசக்தியை இன்றைக்கெல்லாம் தரிசித்துக் கொண்டிருக்கலாம். ஸ்ரீ ஆதி சங்கரர் பிரதிஷ்டை செய்துள்ள ஸ்ரீ சக்கரம் அருகில் இருக்கிறது. அதற்குத்தான் அன்றாட பூஜைகள் நடைபெறுகின்றன. வெளிப் பிரகாரத்தில் ஸ்ரீ ஆஞ்சநேய சுவாமி திருச்சந்நிதி கொண்டிருக்கிறார். நவராத்தியின் போது இங்கு கோலாகலமான திருவிழா நடைபெறுகிறது.

கனக துர்க்கையம்மன் கோயிலை அடுத்துள்ள ஆலயத்தில் ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ நடராஜமூர்த்தி, அன்னை சிவகாமி மூவரும் எழுந்தருளியிருக்கிறார்கள்.

சற்றுக்கீழே மல்லேச்வரர் என்றும் மல்லிகார்ஜுனர் என்றும் அழைக்கப்படும் சிவாலயம் இருக்கிறது. தர்மபுத்திரர் தங்கள் வெற்றியின் சின்னமாக சுவாமியை இங்கு பிரதிஷ்டை செய்ததாகப் புராணம் கூறுகிறது. கலியுகத்திற்கு

முன். அகத்திய முனிவர் இந்த சிவலிங்கத்தை வழிபட்ட தாகவும், சுவாமிக்கு அவர் 'ஜயசேனர்' என்ற திருநாமம் சூட்டியதாகவும் ஒரு புராண வரலாறு உண்டு. மல்யுத்தத் தில் தலை சிறந்து விளங்கிய அர்ஜுனன் இவரை மல் லேச்வரர் என்று அழைத்ததாகவும் கூறப்படுகிறது.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன், மாதவ வர்வா என்ற மன்னன் இப்பகுதியை ஆண்டு வந்தான். அவனுடைய மகன். புளியம்பழம் விற்றுக் கொண்டிருந்த ஓர் ஏழையின் குழந்தையைத் தவறுதலாகக் கொன்று விட்டான். தர்ம நீதி தவறாத அம்மன்னன், ராஜகுமாரனை தூக்கிலிடும்படி உத்தரவிட்டான். அரசனின் நேர்மை கண்டு மல்லேச்வர சுவாமி அவன் முன் தோன்றி, தங்கத்தால் அவனுக்கு அர்ச்சனை செய்தார். உடனே ராஜகுமாரனும், மாண்ட குழந்தையும் உயிர் பெற்று எழுந்தனர்.

தவம் புரிவதற்காக அர்ச்சுனனை இந்த மலைக்கு அனுப்பியதால் இம் மலைக்கு இந்திரகீலம் என்ற பெயரும், விஜயன் இங்கு தவமிருந்து, பாசுபதாஸ்திரத்தைப் பெற் றதால், இந்த ஊருக்கு விஜயவாடா என்ற பெயரும் ஏற் பட்டிருக்க வேண்டும்.

வனவாசம் செய்துகொண்டிருந்த பஞ்ச பாண்டவர்கள், தாருகா வனத்திற்கு வந்தனர். அப்போது வேத வியாசர் அவர்களைச் சந்தித்து, ஐவரில் ஒருவர் சிவபெருமானைக் குறித்துத் தவமிருந்து, அவரிடமிருந்து பாசுபதாஸ் திரத்தைப் பெற்றால், பகைவர்களை எளிதாக வென்று விடலாம் என்று கூறினார். விஜயனான அர்ஜுனன் தவ விரதம் இருக்க முன் வந்தான். இந்திரகீலாத்ரியில், பஞ்ச அக்னிகள் சூழ, கடும் தவமிருந்தான். அர்ஜுனனின்

விடா முயற்சியையும் ஆழ்ந்த பக்தியையும் கண்டு மன மிரங்கிய சிவபெருமான், அவன் கோரிய வரத்தைக் கொடுப்பது என்று முடிவு செய்தார், ஆனால், அவனது பக்தியை மேலும் சோதிக்கத் திட்டமிட்டார். ஒரு கிராத னாக, அதாவது விலங்குகளை வேட்டையாடும் வேட னாக உருமாறினார். பார்வதிதேவி வேடச்சியானாள். சிவ கணங்கள் ஆளுக்கொரு வேடம் புனைந்து கொண்டனர்.

இந்திர கீலாத்ரியில் வேட்டையாடிய சிவபெருமான் ஒரு காட்டுப் பன்றியைத் துரத்திக் கொண்டு வந்தார். அந்தப் பன்றி அர்ஜுனன் இருந்த இடத்திற்கு வெகு அருகில் வரவே, இவன் வில்லை வளைத்து. அதன் மீது அம்பெய்தான். சுவாமியும் அதை அம்பால் அடித்தார். இரண்டு அம்புகளால் தாக்கப்பட்ட காட்டுப் பன்றி அங் கேயே உயிரை விட்டது. இறந்த மிருகம் தனக்குத் தான் சொந்தம் என்று இருவரும் வாதம் புரிந்தனர். வார்த்தைகள் வலுத்து, இருவரும் கை கலந்தனர். மல் யுத்த வீரனான அர்ஜுனன். சுவாமியுடன் போரிட முடி யாமல் விரைவில் களைத்துப் போய்விட்டான். அப் போதும் தெய்வத்தின் உதவியை நாடி, அர்ஜுனன் மண் ணால் ஒரு சிவலிங்கத்தைப் பிடித்து வைத்து, மலர் களால் அர்ச்சித்தான். ஆனால், அந்த மலர்கள் சிவ லிங்கத்தின் மீது விழாமல், ஒவ்வொன்றாக எதிரில் நிற்கும் வேடனின் மீது விழுவதைக் கண்டான் அர்ஜு னன், சிவபெருமான் வேடனின் வேடத்தில் வந்திருப் பதை அறிந்து, அவரது திருவடிகளில் விழுந்து வணங் கினான். அடுத்த கணம் வேடன் மறைந்தான். சிவ பெருமான் அவன் முன் தோன்றி, பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்து விட்டு, ஆசி வழங்கிவிட்டு மறைந்தார்.

இந்த நிகழ்ச்சியை நினைவு படுத்துதற்காக அர்ஜுனன், இந்திரகிலாத்ரியில் விஜயேச்வரர் ஆலலத்தை நிர்மாணித்தான். அந்தக் கோயிலில், பாரவி எழுதிய கிரீடார்ஜுனீய கதையும் மகாபாரத வரலாறுகளும் சிற்பங்களாக வடிக்கப்பட்டிருக்கின்றன. யாத்திரிகர்கள் ராமேச்வரத்திற்கும், காசிக்கும் செல்லும் வழியில் விஜயவாடாவில் இறங்கி, கிருஷ்ணா நதியில் நீராடிவிட்டு, ஸ்ரீகனக துர்க்கையையும், ஸ்ரீ மல்லிகார்ஜுன சுவாமியையும் தரிசித்து விட்டுச் செல்லுகிறார்கள்.

---

# ஸ்ரீசைலம்

அர்ஜுன விருட்சமான மருத மரத்தைத் தல விருட்ச மாகக் கொண்டுள்ள புனிதத் தலங்கள், திருநெல்வேலியி லுள்ள ஸ்ரீ புடார்ஜுனம், தஞ்சையிலுள்ள ஸ்ரீ மத்தியார் ஜுனம், (திருவிடை மருதூர்), கர்நூலிலுள்ள ஸ்ரீ மல்லிகார் ஜுனம் ஆகிய மூன்றும் ஆகும்.

பாரத நாட்டிலுள்ள பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களில் ஸ்ரீசைலநாதரான மகாலிங்கமும் ஒன்று. ஸ்ரீ ஆதிசங்கரர் தமது **த்வாதச லிங்க** தோத்திரத்தில், **"சம்சாரக் கடலைக் கடப்பதற்குப் பாலம் போன்றவரும் சேஷாத்திரியின் உச்சியில் எப்போதும் வசிப்பவருமான மல்லிகார்ஜுன சுவாமியை வணங்குகிறேன்"** என்று கூறுகிறார்.

அவர் இயற்றியுள்ள உன்னத தோத்திர மாலையான **சிவானந்த லஹரியில்**, ஸ்ரீசைலத்தில் உறையும் மல்லி கார்ஜுனரை மட்டும் வெளிப்படையாகக் குறிப்பிட்டு வழி படுகிறார்.

> சந்தியா காலத்தில் ஆரம்பமாகும் ஆனந்தத் தாண்ட வத்தினால் பிரகாசிப்பவரும் வேதங்களின் சிகரமான உபநிஷத்துக்களின் நடுவில் ஸ்தாபிக்கப்பட்டவரும் பிரேமையோடு கூடிய பிரமராம்பிகையினால் அழகுள்ள வரும் எப்போதும் சாதுக்களால் போற்றப்படுபவரும் நாகராஜனை ஆபரணமாக அணிந்தவரும் சகல தேவர்களாலும் புகழத் தகுந்தவரும் உயர்ந்த சத்வ குணத்தை வெளிப்படுத்துகிறவரும் பார்வதி தேவி யினால் ஆலிங்கனம் செய்யப்பட்டவருமான ஸ்ரீ பர் வதத்திலிருக்கிற மல்லிகார்ஜுன மகாலிங்கத்தை நான் வணங்குகிறேன்.
>
> (சுலோகம்—50)

பிருங்கி மகரிஷியின் இச்சைக்குத் தகுந்தபடி நாட்டியமாடுவதில் ஆசையுள்ளவரும் மதயானையை அடக்கியவரும் ஸ்ரீ மகா விஷ்ணுவுக்கு ஆனந்தத்தை விளைவிப்பவரும், ஓங்கார நாதத்துடன் கூடியவரும் ஒளிமயமான தேகத்தை உடையவரும் நல்லோரின் மனங்களில் நடமாடுபவரும் பிரமராம்பிகையின் பதியுமான ஸ்ரீசைலவாசியாகிய பிரபு என் மனமாகிய தாமரையில் விளையாடட்டும்.

(சுலோகம்—51)

இத்தலத்தில் திருக்கோயில் கொண்டிருக்கும் ஜகன் மாதாவான பிரமராம்பிகையைக் குறித்து ஸ்ரீ அதிசங்கரர் **பிரமராம்பாஷ்டகம்** என்ற எட்டுத்தோத்திரப் பாடல்களையும் இயற்றியுள்ளார்.

இவ்வாறு ஸ்ரீ ஆதி சங்கர பகவானுடைய மங்களாசாசனம் பெற்றுள்ள ஸ்ரீசைலம் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள கர்நூல் மாவட்டத்தில் உள்ளது. ஓங்கோலில் இறங்கி பஸ்ஸில் அங்கு சென்றோம்.இப்புனித மண்ணில் காலடி எடுத்து வைத்ததுமே என்னையும் அறியாமல் அருள் வெள்ளம் பொங்கி, என் உள்ளத்தை நிரப்பியது; உடலெங்கும் ஒரு பரவசம் பரவி, மெய் சிலிர்க்க வைத்தது.

மல்லிகார்ஜுன சுவாமி, சுயம்புலிங்கமாய்ப் பிரகாசிக்கிறார். அர்ஜுனனின் அம்பு தாக்கியதால் அவர் சிரசில் ஒரு பிளவு காணப்படுகிறது. தமிழகக் கோயில்களில் இருப்பது போன்ற பூஜை முறை இங்கில்லை. வீர சைவர்களான மைசூர் லிங்காயத் குலத்தைச்சேர்ந்தவர்களே பரம்பரையாக பூஜை செய்து வருகிறார்கள்.யார் வேண்டுமானாலும் சுவாமியின் அருகில் சென்று புஷ்பம் போட்டு, தொட்டு வணங்கலாம். அம் மலைப் பகுதியைச் சேர்ந்த பழங் குடிகளான 'செஞ்சு' ஜாதிப் பெண்ணொருத்தி சிவபெருமானைத்

துதித்து, தவம் இருந்து அவரையே மணந்துகொண்டதாக வும் அதனாலேயே மல்லிகார்ஜுனருக்கு 'செஞ்சுமல்லையா' என்று ஒரு பெயர் வழங்கப் படுவதாகவும் தொன்மையான வரலாறு ஒன்று கூறுகிறது. அதன் தொடர்பாகவோ என்னமோ, இன்றும் பூஜையின் போது பெண்கள் சுவாமிக்கு வெண்சாமரம் வீசி உபசாரம் செய்கிறார்கள்.

ஆனால், பிரமராம்பிகைக்கு நம் முறைப்படி வைதீக பூஜைதான் நடைபெறுகிறது. வடக்கே போகப்போக பக்தர்கள் மூலவரிடம் நெருங்கி வழிபடும் முறை இருந்து வருகிறது. அங்கெல்லாம் அது ஆசாரமாகக் கருதப்படுகிறது. இக்கோயிலில் இவ்விரண்டு பூஜை முறைகளும் காணப்படுவதால், தென்னகப் பழக்கம் முடிந்து, வடநாட்டு பழக்கம் ஆரம்பமாவதை இது காட்டுகிதோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

சிவபெருமான் வேடனாக வேடம் புனைந்து, அர்ஜுனுக்கு பாசுபதாஸ்திரம் கொடுத்ததாகக் கருதப்படும் ஸ்ரீசைல புனிதத் தலத்தைப் பற்றி மகா பாரதத்தில் வன பர்வதத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது:

> 'ஸ்ரீ சைலத்தில் பார்வதி தேவியுடன், சிவபெருமான் வாசம் செய்கிறார் இங்கே இதர தேவதைகளுடன் பிரும்மாவும் தங்கியிருக்கிறார். இங்குள்ள புனித நீரில், உள்ளத் தூய்மையுடன் ஒருவர் நீராடினால், ஓர் அசுவமேத யாகம் செய்த பலன் கிடைப்பதோடு, அவருடைய வம்சமே நற்கதியடைகிறது.

ஆருத்திரா தரிசனத்திற்குச் சிதம்பரத்திற்கும். வைகுண்ட ஏகாதசிக்கு ஸ்ரீரங்கத்திற்கும், கார்த்திகை தீபத்

திற்குத் திருவண்ணாமலைக்கும் போவது போல் சிவராத்திரிக்கு ஸ்ரீசைலத்திற்குப் போவதைப் பக்தர்கள் பெரும் புண்ணியமாகக் கருதுகிறார்கள்.

கர்நூலிலிருந்து சித்தூர் வரை பரந்து கிடக்கும் நல்லமலைத்தொடரைப் புராணங்களில் ஸ்ரீ ஆதிசேஷனாகக் குறிப்பிட்டு, திருப்பதியின் ஏழு குன்றுகளை ஆதிசேஷனின் ஏழு தலைகளாகவும், உடலின் மத்திய பாகத்தை அகோபிலமாகவும் அதன் வாலை ஸ்ரீசைலமாகவும் வர்ணித்திருக்கிறார்கள். வேங்கடாசலபதியையும் நரசிம்மனையும் பரமேசுவரனையும் ஒரே ஆதிசேஷன் தாங்குவதாகக் கற்பனை செய்து எல்லாத் தெய்வங்களும் ஒரே பரமாத்ம தத்துவத்தின் பல சொரூபங்களே என்ற அத்வைத மனப்பான்மையை நம் முன்னோர்கள் உறுதிப்படுத்தியிருக்கிறார்கள் என்றே எண்ணத் தோன்றுகிறது.

புராதனப் பெருமை வாய்ந்த ஸ்ரீ மல்லிகார்ஜுன ஆலயம் தோன்றியதைப் பற்றிப் பல கதைகள் கூறப்படுவது உண்டு.

அவற்றில் ஒரு கதை மிகவும் பிரசித்தமானது. சந்திரகுப்தனின் பெண் சந்திரவதி, இங்குள்ள சிவலிங்கத்திற்கு தினமும் மல்லிகைப் பூச்சூட்டு, வழிபட்டு, கடைசியில் சிவபெருமானை மணந்து கொண்டதாகவும், அதன் காரணமாகவே இங்கே சுவாமிக்கு மல்லிகார்ஜுனர் என்ற பெயர் தோன்றியதாகவும் கூறப்படுகிறது.

சந்திரவதியைப் பற்றி மற்றொரு வரலாறும் உண்டு. தன்னை யாரென்று புரிந்து கொள்ளாமல் தன்னையே மணக்க வந்த தந்தையிடமிருந்து தப்பித்துக் கொண்டு கிருஷ்ணாநதியின் தென் கரையிலிருக்கும் ஸ்ரீசைலத்திற்கு

ஓடி வந்து விட்டாள் சந்திரவதி. அங்கு காடுகளில் ஆடு மாடுகளை மேய்த்து வந்தாள். எல்லாப் பசு மாடுகளும் நிறையப் பால் கொடுக்க, ஒரு பசு மட்டும் பாலே கொடுக்காததைக் கவனித்தாள் சந்திரவதி. ஒருநாள் அந்தப் பசுவைப் பின் தொடர்ந்து சென்றாள். மாலையில் வீடு திரும்பும் முன்பு, ஒரு மரத்தடியில் இருக்கும் சிவலிங்கத்தின் மீது அப்பசு தன் பாலைப் பொழிவதைக் கண்டு அதிசயித்தாள். பசு தனக்கு பால் கொடுக்காததன் காரணத்தை அறிந்து கொண்ட அவள் பக்தியால் உந்தப்பட்டு, சிவலிங்கத்திற்குத் தினமும் பால் அபிஷேகம் செய்து வந்தாள். ஒரு நாள் சிவபெருமான் அவளது கனவில் தோன்றி. தமக்கொரு மண்டபம் கட்டும்படி கூற, சந்திரவதியும் அதைக் கட்டி முடித்து, அந்த சிவலிங்கத்தைப் பூஜித்து, நற்கதியடைந்தாள். சந்திரவதி கட்டியதுதான் புராதனக் கோயிலாகக் கருதப்படுகிறது.

மல்லிகார்ஜுன ஆலயத்திலுள்ள அம்மனுக்கு பிரமராம்பிகை என்ற பெயர் வந்ததற்கு ஒரு சுவையான கதையைக் கூறுகிறார்கள்.

பிருங்கி மகரிஷிக்குப் பரமேசுவரன் ஒரு சமயம் அர்த்தநாரீச்வரராகக் காட்சி தந்தார். அவரை வலம் வரவேண்டும் என்று விரும்பினார் ரிஷி. ஆனால், பார்வதி தேவியையும் சேர்த்துச் சுற்ற அவர் விரும்பவில்லை. எனவே, வண்டு உருவம் எடுத்துக் கொண்டு இருவருக்குமிடையே ஒரு துளை போட்டு, ஈசுவரனை மட்டும் வலம் வந்தார் அந்த ரிக்ஷி. இதைக் கண்ட தேவி கோபம் அடைந்து ரிஷியின் இரத்தத்தை உறிஞ்சி விட்டாள். பின்னர் தம் கணவரின் மீது அவர் கொண்டுள்ள எல்லையற்ற பக்தியைக்கண்டு அவருக்கு நல்லாசி வழங்கினாள். வண்டு உருவத்தில் வந்த மாமுனிவரை ஆட்கொண்ட அம்பிகை, பிரமராம்பாள் ஆனாள். வடமொழியில் ‘பிரமரம்’ என்றால் ‘வண்டு’

என்று பொருள். மல்லிகையின் மீது மோகம் கொண்டுள்ள வண்டுபோல், மல்லிகார்ஜுனரின் மீது பிரேமை கொண்டுள்ளாள் பிரமராம்பாள் இன்றைக்கும் அம்மன் சந்நிதிக்குப் பின்னாலுள்ள சிறு துவாரத்தில் காதை வைத்துக் கேட்டால் வண்டு ரீங்காரம் செய்வது போல் ஒலி கேட்குமாம்.

வண்டு உருவம் கொண்டு அருணாசுரனைக் கொன்றதால் இப்பெயர் ஏற்பட்டதாகவும் கூறப்படுகிறது.

சத்திரபதி சிவாஜி மலையைக் கடந்து வந்து, பாதாள கங்கையில் நீராடி, மல்லிகார்ஜுனரைப் பத்து நாட்கள் பூஜித்து வந்ததாகவும், எல்லையற்ற பக்தியினால் அவருக்குத் தம்மையே அர்ப்பணித்துக் கொள்ள அம்மனின் சந்நிதிக்கு வந்தபோது, மந்திரிகள் தடுத்து 'மக்கள் சேவையே தெய்வ சேவை' என்று வற்புறுத்திக் கூறி அவரை அழைத்துச்சென்று விட்டதாகவும் ஒரு வாலாறு கூறப்படுகிறது. வடக்குப்புறக் கோபுரத்தைச் சிவாஜி கட்டியதால், அதை 'சிவாஜி கோபுரம்' என்று அழைக்கிறார்கள்.

துவஜஸ்தம்பத்துக்கு அடுத்தாற் போல் முதலில் நந்தி மண்டபம். அதில் பெரிய அளவில் ஒரு நந்தியைப் பார்க்கிறோம். மண்டபத்தின் மேல் ஒரு வெண்ணிற நந்தி இருப்பதையும் அதிசயமாகக் காண்கிறோம். தெற்கே தட்சிணாமூர்த்தி காட்சி அளிக்கிறார். அதற்கடுத்து மற்றொரு மண்டபம். அதன் வாயிலில் துவார பாலகர்கள் நிற்கிறார்கள். அதற்கடுத்து மற்றொரு மண்டபம். அதன் மேலேயும் ஒரு நந்தி! தெற்கு நோக்கி பிட்சாடனரின் திருக்கோலம். அந்த மண்டபங்களுக்கு வடப்புறத்தில் தல விருட்சமும் புராதனக் கோயிலும் ராமர் பூஜித்த சகஸ், லிங்கமும் இருக்கின்றன.

சந்நிதிக்கு முன்புள்ள மண்டபத்தின் தென்புறத்திலுள்ள விநாயகரை வணங்கி விட்டு, சந்நிதிக்குப் போகி

றோம். மல்லிகார்ஜுனருக்கு உடுக்கையடித்து, சங்கம் முழங்கிப் பூஜை நடக்கிறது. இரு சிறுவர்கள் 'விசேஷ' உச்சரிப்புடன் மந்திரங்களை ஓதுகிறார்கள். தீபாராதனை நடக்கிறது.

பாலும் வடைப் பருப்பும் பிரசாதமாகக் கிடைக்கிறது. பெருமாள் கோயில் போல் சடாரியும் சாதிக்கிறார்கள்.

கர்ப்பக்கிருக விமானத்தின் உச்சியிலும் நான்கு மூலை களிலும் திரிசூலங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. விமானத் திற்குப் பின்னால் மற்றொரு துவஜஸ்தம்பம் இருக்கிறது. மேற்குப்புறம், படியேறிப் போய் அம்மன் கோயிலை அடை கிறோம். ஆதி சங்கரரால் பிரதிஷ்டை செய்யப் பட்டுள்ள அம்பிகையின் மகிமையை அவரே வர்ணிப்பதைக் காது குளிரக் கேட்போம்:

> "ஸ்ரீசைலத்தில் உறையும் தெய்வீகத் தாயைப் பூஜிக்கிறேன். அவள்தான் காயத்ரி. அவள் கை யில் கருடக் கொடி இருக்கிறது. அவள் வானில் சஞ்சரிப்பவள். தேவகானத்தைக் கேட்டு ரசிப்ப வள். அவள் கம்பீரம் நிறைந்தவள். யானையைப் போல ராஜ நடை போடுபவள். இமவான் பெற் றெடுத்த மங்கை நல்லாள் அவள். சந்தனக் குழம்பால் சரீரத்தை எழிலுறச் செய்து கொண்டிருப்பவள். கங்கையும் கௌதமியும் கர்காவும் அவளை வழிபடு கிறார்கள். அவளை கௌதமி என்றும் கோமதி என்றும் அழைப்பார்கள். — **பிரமராம்பாஷ்டகம்**

கோயிலுக்குள், கிழக்கு நோக்கி அமைந்துள்ள அழகிய தொரு மண்டபத்தில் அப்பர், சுந்தரர், சம்பந்தர் மூவரும் ஸ்ரீசைலம் பற்றிப் பாடியுள்ள தேவாரப் பதிகங்களைத் திருப்பனத்தாள் ஸ்ரீ காசி மடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீகாசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் நான்கு ஆண்டு களுக்கு முன் சலவைக் கற்களில் பொறித்து பதிப்பித்

துள்ளார்கள். அவற்றை ஒவ்வொன்றாகப் படித்து இன்புறுகிறோம்.

இருபதடி உயரமுள்ள மதிற்சுவர், கோயிலை எழிற் கோட்டையாகச் சுற்றியிருக்கிறது. அது அறுநூறு அடி நீளமும் ஐந்நூறு அடி அகலமும் உடையது. அதன் வெளிபுறத்தில், சிவப்பெருமானைப் பற்றிய புராண வரலாறுகள் சிற்பங்களாக வடிக்கப் பட்டிருக்கின்றன. கிழக்குப் புறத்தில், முதலையொன்று ஒரு பையனை இழுத்துச் செல்வதுபோல் ஒரு சிற்பம் காணப்படுகிறது. இது ஆதி சங்கரரின் வரலாற்றைக் குறிப்பதாக நம்பப்படுகிறது.

ஸ்ரீசைல புனிதத்தலத்தைப் பற்றிப் பல புராதன நூல்களில் குறிப்புக்கள் காணப்படுகின்றன. அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகியோரால் பாடப்பெற்றதோடு, ஸ்ரீ ஸ்காந்த புராணத்திலும் திருநாவுக்கரசரைப் பற்றி சேக்கிழார் கூறும் இடத்திலும் கச்சியப்பசிவாசாரியர் தமிழில் இயற்றிய கந்த :புராணத்திலும் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்திலும் காஞ்சி சிதம்பர முனிவர் எழுதிய ‘க்ஷேத்திரக் கோவை’ யிலும் ஸ்ரீசைலத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லாவற்றைக் காட்டிலும் **ஆனந்த காந்தம்** என்ற நூலில் இதன் மகிமை மிக உயர்வாகக் கூறப்பட்டுள்ளது.

ஸ்ரீசைலம், மல்லிகார்ஜுனம், ஸ்ரீ பர்வதம் என்று புராணங்களிலும் சீபர்ப்பதம் என்றும் திருபர்ப்பதம் என்றும் தூய தமிழிலும் அழைக்கப்படும் இந்த மலையின் வரலாறு தொன்மை வாய்ந்தது.

சிலாத முனிவரின் புதல்வரான நந்திகேசுவரர், பரமேசுவரனைக் குறித்துத்தவம் புரிந்து, அவரது அருளைப் பெற்றதாகவும் பின்னர், தம் விருப்பப்படியே ஒரு மலை

யாக மாறி, ஈசுவரனைத் தாங்கும் பாக்கியம் பெற்றதாகவும் அது தான் ஸ்ரீசைலம் என்றும் கூறப்படுவது உண்டு.

ஆனால் 'ஆனந்த கந்தம்' என்ற நூலில் பரமேசுவரனே இம் மலையின் வடிவத்தில் இருப்பதாக ஒரு வரலாறு கூறப்பட்டிருக்கிறது.

அதில் அம்பிகை, ஈசுவரனைப் பார்த்து,

'இந்த ஸ்ரீசைல க்ஷேத்திரத்தில் அநேக விதமான ஸித்திகள் எளிதாக ஏற்படுகின்றன என்றும் இவை உடனே எல்லோருக்கும் நம்பிக்கையை உண்டு பண்ணக்கூடியவையா யிருக்கின்றன என்றும் கேள்விப் படுகிறேன்.... இதை எனக்கு விளக்க வேண்டும்' என்று கேட்க, பைரவர் கீழ்க் கண்டவாறு பதிலளிக்கிறார்:

> 'பிரியமானவளே, கைலாசம், மந்தரம், மேரு விந்தியம், இமாலயம், மகேந்திரம், மலயம், ருச்யமூகம் போன்ற மலைகளைக் காட்டிலும் ஸ்ரீபர்வதம் மேன்மை வாய்ந்தது. இந்த ஸ்ரீசைலம் ஸித்தர்களாலும், தவ யோகிகளாலும் வணங்கப்படுவது. இங்குள்ள நீர், மலர்கள், பழங்கள், கொடிகள், புற்பூண்டுகள், கிழங்குகள், இலைகள் எல்லா வஸ்துக்களும் சகல ஸித்திகளையும் கொடுக்கும் சக்தி பெற்றவை. ஏ, அம்பிகே இந்தப் பர்வதத்தை என்னுடைய அசையாத உருவமென்று அறிந்து கொள். இந்தப் பர்வதத்தில் இருப்பவை மற்ற இடங்களில் இல்லை. மற்ற இடங்களில் இருப்பவை யெல்லாம் இந்த மலையில் இருக்கின்றன......'

பரமேசுவரன், ஜகன்மாதாவுக்கு மேற்கண்டவாறு சொன்னது சத்தியவாக்கு என்பதை நிரூபிக்கவோ என்னவோ ஸ்ரீசைலத்தில், பூஜா பலனால் ஏற்பட்டுள்ள

மந்திர சக்தியின் மூலம் சில ஸித்திகளைப் பெற்றிருக்கும் ஒருவரை இத்தலத்தில் நான் சந்திக்க நேர்ந்தது.

## அனுமந்த தாசர்

இவருடைய பெயர் லங்க்கா வெங்கடேசுவர சாஸ்திரி அனுமந்த தாஸ். இவர் குண்டூரில் ஓர் ஆயுர்வேத டாக்டர். இவருடைய தந்தையான லங்க்காலிங்கய்ய சாஸ்திரி என்பர் ஒரு சங்கீத வித்வானாக இருந்தவர்.

பதினாறு வயதிருக்கும்போது தெனாலியில் படித்து கொண்டிருந்த வெங்கடேசுவரன், வீட்டில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஒரு நாள் ஸ்ரீசைலத்திற்கு வந்து விட்டான். மறுநாள் சிவராத்திரி அங்கிருந்த ஒரு பிராமணர் இவனைப் பார்த்து, நந்தியாலுக்குப் பத்து மைல் தொலைவி லுள்ள மகாநந்தி சிவத் தலத்திற்குச் செல்லும்படி இவனிடம் கூறினார். சிவராத்திரியன்று மகாநந்திகேசுவரரின் தரிசனம் கிடைத்தது. மறுநாள் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு கிழக்குப் புறமாக நடந்து கொண்டிருந்தவன், மகரிஷியைப் போன்ற ஓர் 'அவதூத்' சுவாமிகளைக் கண்டான். அவர் 'வா' என்று அவனை அன்புடன் அழைத்து நலம் விசாரித்தார். பின்னர், அவனுடைய பரம்பரையைப் பற்றிச் சொன்னார். வீட்டிலிருந்த பெரி யோர்களின் பெயர்களையெல்லாம் கூறினார். பையனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. கடைசியாக அவர் ஒரு கேள்வியைக் கேட்டார்: "ஆமா, வீட்டில் சொல் லிக் கொள்ளாமல் ஏன் தனியாக ஸ்ரீசைலத்திற்கு வந்தே?"

வெங்கடேசுவரன் அந்தக்கணமே அந்த அற்புத புருஷருக்கு அடிமையாகி விட்டான்.

அந்த மகான், வெங்கடேசுவரனுக்கு ஏதோ மந்திர உபதேசம் செய்தார். அந்த மந்திரத்தில் கட்டுண்டவன் போல் அவன் மூன்று நாட்கள் அங்கேயே அனுஷ்டானங்கள் செய்து, ஏதோ ஓர் இயந்திர கதியில் வாழ்க்கையைக் கடத்தினான். அவனுக்குச்சூரியோதயம் ஆனது தெரிந்தது. சூரியாஸ்தமனம் புரிந்தது. அவ்வளவுதான். அன்ன ஆகாரம் கூடத் தேவையில்லாமல் தன்மயமாகி விட்ட நிலையில், அவன் முற்றிலும் புதிய பிறவி எடுத்து விட்டான்.

நான்காவது நாள் காலையில் பையனைப் புறப்பட்டுப் போகும்படி அந்த மகாத்மா கூறிவிட்டார். ஆனால், அவரை விட்டுப் பிரிய இவனுக்கு மனவரவில்லை. 'சுவாமி என்னை ஏன் போகச் சொல்கிறீர்கள்? உங்களை விட்டு விட்டு என்னால் வாழ முடியாது. அப்படியொரு வாழ்வு எனக்கு வேண்டாம். நான் உங்களுடனேயே இருந்து விடுகிறேனே!''—பையன் கெஞ்சினான், மான்றாடினான், கால்களைப் பற்றிக் கொண்டான். பயனில்லை.

"குழந்தாய், எழுந்திரு. கவலைப் படாதே. நான் எப்போதும் உன்னுடனேயே இருப்பேன். நீ புறப்பட்டு நேரே உன் சிற்றப்பா வசிக்கும் ஊருக்கு போ. அவருடைய வீட்டில் அலமாரியொன்றில் தலைமுறை தலைமுறையாக வந்துள்ள பூஜைக்கு வேண்டிய சாமான்கள் இருக்கின்றன. அவற்றை எடுத்துப் போய்ப் பஞ்சாயதன பூஜை செய்து வா. ஆறு மாதங்களில் உனக்கு ஆஞ்சநேய மூர்த்தி பிரத்யட்சமாகி அனுக்கிரகம் பண்ணுவார். போ.'' என்று கூறிவிட்டு, அந்த மகாத்மா எங்கோ மறைந்து விட்டார்.

வெங்கடேசுவரன், சிற்றப்பா விட்டுக்குச் சென்று அங்கிருந்த பூஜை உபக்கிரமங்களை எடுத்து வந்து மகாத்மா சொல்லிக் கொடுத்த மந்திரத்தைச் சொல்லி, தனக்குத் தெரிந்த வரையில் ஏதோ பூஜை செய்து வந்

தான். வீட்டிலுள்ளோருக்கு கவலை வந்து விட்டது. ''பையனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ?''

ஆறுமாதம் கடந்தது, பஞ்சமுக ஆஞ்சநேயர் அவன் கனவில் தோன்றி ஒழுங்கான பூஜை முறைகளை சொல்லித் தந்ததோடு, வேறொரு முக்கியமான செய்தியையும் கூறினார்.

''மேற்கு கோதாவரி ஜில்லாவில் தணுகு தாலுக்காவி லுள்ள 'சிலக பாடுலே' என்ற கிராமத்தில் சத்திய நாராயண ராஜு வீட்டில். மாட்டுத் தொழுவத்தில், பூமிக்கு ஆறு கஜ ஆழத்தில் உலோக உருவில் நான் இருக்கிறேன். எடுத்து வந்து நான் சொல்லிய முறையில் தினமும் பூஜை செய். உனக்கு நல முண்டாகும்?'' என்று கூறி ஆஞ்சநேயர் மறைந்து விட்டார்.

ஸ்ரீ ஆஞ்சநேயர் கூறிய அடையாளங்களை வைத்துக் கொண்டு வெங்கடேசுவரன், சத்தியநாராயணராஜுவிடம் சென்று, மாட்டுக் கொட்டகையைத் தோண்டிப் பார்க்க வேண்டும் என்று ஆவலுடன் கேட்டான். அவரோ அவ னைப் பைத்தியம் என்று கூறி விரட்டி விட்டார். ஆனால், அன்று இரவே ஆஞ்சநேயர் அவரது கனவில் தோன்றி, ''இந்த விக்ரகம் வெங்கடேசுவரனுக்குச் சொந்தமானது. அதை நீ அவனுக்கு எடுத்து கொடுக்காவிட்டால் உனக்குக் கேடு விளையும்'' என்று கூறவும் ராஜு பயந்தே போய் விட்டார். அதற்குள் வெங்கடேசுவரனும், சர்க்கார் அதி காரிகளின் துணையுடன் அந்த வீட்டிற்கு வந்து, பூமியைத் தோண்டி, நீரில் மிதந்து கொண்டிருந்த பஞ்சமுக ஆஞ்ச நேய உருவச் சிலையை எடுத்து மார்புடன் அணைத்துக் கொண்டான். இது நடந்தது 1940-ம் ஆண்டில்!

அன்று முதல், ஸ்ரீ சுவர்ச்சலாம்பாளையும் ஸ்ரீ பஞ்சமுக ஆஞ்சநேயரையும் ஆராதித்து வருகிறார் இந்த அனுமந்த தாஸர். ஆஞ்சநேயர், நரசிம்மர். கருடர், வரர்கர்,

ஹயக்ரீவர் ஆகிய ஐந்து முகங்கள் கொண்ட இந்த விக்ரகத்தையும், சிவலிங்கத்தையும் முறைப்படி பூஜை செய்து வரும் இவர், வருடாவருடம் அனுமத்த ஜயந்தி நடத்தி வருகிறார். பத்து வருடங்களுக்கு முன் ருத்ர மகா யக்ஞம் ஒன்று நடத்தும்படியும், அதில் சர்ப்ப ஆவாஹனம் செய்யும் படியும் இவருக்கு உத்தரவாயிற்றாம். அதன்படியே பன்னிரண்டு கலசங்களை வைத்து, சர்ப்ப ஆவாஹனம் செய்தபோது எங்கிருந்தோ பன்னிரண்டு நல்ல பாம்புகள் வந்து கலசங்களைச் சுற்றிக் கொண்டதாகவும், பூஜையெல்லாம் முடித்ததும் அவை தாமாகவே வெளியே சென்று விட்டதாகவும் கூறினார். அன்றிலிருந்து எப்போது மனத்தில் சங்கல்பம் செய்து கொண்டாலும் இவரது பூஜைக்கு நாகராஜன் வந்து படம் எடுத்து அசையாமல் நிமிர்ந்து நிற்கிறானாம்!

தாம் பூஜை செய்யும் பஞ்சமுக ஆஞ்சநேயரின் ஐந்து முகங்களில் ஒன்று கருடனாக இருப்பதாலும், ஆஞ்சநேயருக்கே நாகபூஷணன் என்று திருநாமம் இருப்பதாலும் தம்மிடம் வரும் பாம்புகள் கட்டுண்டு இருக்கின்றன என்று இவர் கூறினார்.

ஸ்ரீவெங்கடேசுவர சாஸ்திரி, ராஜமந்திரியிலிருக்கும் கோவூர் கல்லூரியில் சமஸ்கிருதம் பயின்றவர். அதைத் தவிர, பத்து ஆண்டுகள் முறைப்படி வேத அத்யயனம் செய்திருப்பவர். கர்மானுஷ்டானங்களைச் சரிவரச் செய்து வருபவர். நெறி தவறாத வாழ்க்கையில் நிம்மதியைக் காண்பவர். உண்மையான பக்தியில் விளைந்த மந்திர சக்தியை விளம்பரம் செய்து பலன் பெற முயலாமல், தன்னடக்கத்துடன் வாழ்ந்து வருபவராகவே அவர் தோற்றமளித்தார்.

நான் அவருடன் உரையாடிக் கொண்டிருந்த போது வைத்த கண் வாங்காமல் நண்பர் பாட்ஜி அவர் அருகிலி

ருந்த சிறு அலுமினியப் பெட்டியையே பார்த்துக்கொண்டிருந்தார்.

அதனுள் ஒரு நல்ல பாம்பு இருப்பதாக தாசர் கூறியிருந்தார்!

''இந்தப் பாம்பு உங்களிடம் எப்படி வந்தது?'' என்று அவரிடம் கேட்டேன்.

அவர் கூறினார் :

''சிவராத்திரியன்று ஸ்ரீசைலத்திற்கு வரவேண்டும் என்றும் நல்லபாம்பை வரவழைத்து ஸ்ரீமல்லிகார்ஜுனருக்கு பூஜை செய்ய வேண்டும் என்றும் தேவஸ்தானத்தார் எனக்குக் கடிதம் எழுதி யிருந்தார்கள். குண்டூரில் என் வீட்டில் சிவராத்திரி பூஜை செய்தபோது, சர்ப்ப ஆவாஹனம் செய்தேன். மொத்தம் ஐந்து நல்ல பாம்புகள் வந்தன. பூஜைக்குப் பிறகு நான்கு போய்விட்டன. இது மட்டும் என்னுடனேயே தங்கிவிட்டது'' என்று கூறிவிட்டு, இத்தனை நேரம் 'பெட்டிப் பாம்'பாக இருந்த அந்த சர்ப்பத்தை எடுத்து வெளியே விட்டார் அனுமந்ததாசர்!

எங்களில் ஒருவரும் அதுவரை இத்தனை அருகில் ஒரு நல்ல பாம்பைப் பார்த்ததே கிடையாது, எழடி நீளத்தில், இரண்டடி தொலைவில் படம் எடுத்தாடும் ஒரு பாம்பைக் கண்டதும் சட்டென்று ஒருவித திகில் எங்களைப் பற்றிக் கொண்டது. 'நீங்களெல்லாம் யரர்?' என்பது போல் அது கம்பீரமாகத் தலையைச் சுழற்றிப் பார்த்தது: நாக்கை வெளியே நீட்டி நீட்டி உள்ளுக்கிழுத்துக் கொண்டது. பின்னர் மெள்ள ஊர்ந்து வந்தது. நண்பர்களின் மடியில் ஏறிற்று. எங்களுக்கு லேசாக ஒரு தைரியம் பிறந்தது. இது 'கெட்ட பாம்பு' இல்லை. உண்மையாகவே இது ஒரு 'நல்ல பாம்பு' என்ற உணர்வு ஏற்பட்டது.

இருப்பினும், அத்தனை பேருக்கும் உள்ளுக்குள் ஒரு சிறு சந்தேகம், ஒருவித நடுக்கம். ஆனால், முகத்திலோ 'நாங்கள் சிறிதும் பயப்படவில்லை' என்ற பாவனையில் ஒருவித அசட்டுச் சிரிப்பு !

அனுமந்த தாசர் கைகளைத் தட்டிப் பாட ஆரம்பித்தார்.

**''சங்கர சிவா, சங்கர சிவா**
**சம்போ மகாதேவா சங்கர சிவா''**

பாம்பு அவர் பக்கம் திரும்பிற்று. அவர் எங்களையும் பாடச் சொன்னார். நாங்களும் கோரஸாக,

**''சங்கர சிவா, சங்கர சிவா**
**சம்போ மகாதேவா சங்கர சிவா''**

என்று தாளம் போட்டுக் கொண்டே பாடினோம். அதைக் கேட்ட பாம்பு ஒவ்வொருவராகத் திரும்பிப் பார்த்தது. எங்கள் முகங்களைக் கூர்ந்து கவனித்தது. எங்கள் கண்களைச் சந்தித்தது. நாக்கை நீட்டி நீட்டி உள்ளுக்கிழுத்துக் கொண்டது. 'சட்'டென்று திரும்பி என் காலருகில் வந்து படமெடுத்தது!

முதன் முறையாகப் 'பய பக்தி' என்ற சொற்றொடரின் முழுப் பொருளையும் நான் உணர்ந்து கொண்டேன்.

சிறு வயதில் 'உம்மாச்சி கண்ணைக் குத்தி விடும்' என்ற பயத்தைக் காட்டியே நம்மிடம் கடவுள் பக்தியை வளர்க்கிறாள் தாய். வயதாக ஆக நம் அறிவு வளர்கிறது. அறிவினால் பயம் போய் விடுகிறது. பக்தி மட்டும் நிலைக்கிறது.

குழந்தைப் பருவத்தில் பயத்தினால் பக்தி வளர்கிறது. அறிவு வளர்ந்ததும், பக்தியினால் பயத்தைப் போக்கிக் கொள்கிறோம்.

என் காலடியில் ஒரு நல்ல பாம்பைக் கண்டதும் பயமும் பக்தியும் இணைந்த வாழ்க்கைத் தத்துவத்தின் நுட்பத்தை நான் நுகர்ந்தேன். என்னுள் பயம் மேலோங்கியதா, பக்தி மேலோங்கியதா என்று தெளிவாகக் கூற முடியவில்லை. இரண்டும் கலந்த ஒரு தெய்வீக மருட்சி என்னுடல் முழுதும் பரவிற்று.

அவரது பூஜைக்கு வரும் பாம்புகள் மிகவும் ஆசாரமாக இருக்குமாம். எனவே, இந்தப் பாம்புக்கு விடியற்காலை ஸ்நானம் செய்து வைத்து விடுவாராம். அந்தப் பாம்பு பாலைத் தவிர வேறு ஒன்றும் உட்கொள்ளாதாம். சுத்த சைவம். ஏகாதசி நாட்களில் அது பால் கூட அருந்துவது இல்லையாம். சுத்தப்பட்டினி. 'பாவம் பட்டினியாயிருக்கிறதே' என்று வலுக்கட்டாயமாக பாலைச் செலுத்தினால் அது கக்கி விடுமாம். அன்று ஏகாதசியானதால், அது ஒன்றுமே சாப்பிட வில்லையாம். அதனால் தான் அது சோர்ந்து இருப்பதாகவும், இல்லாவிட்டால் இன்னும் நன்றாகப் படம் எடுத்து ஆடும் என்றும் கூறினார் தாசர்.



